லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, $5\frac{1}{2}$ அணா.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவின் விவரம்.
ஒரு வருஷத்துக்கு ரூ. 4.
6 மாதத்துக்கு ,, 2-2.

# விவேக சிந்தாமணி




அறிவைப்பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.



புத்தகம் 10.] 1901ஆ டிசம்பர்மீ [இலக்கம் 8.

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy $7\frac{1}{2}$ As. : Back Nos. 8 As. each.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION *7s. 6d.* NET PER ANNUM.

**Thin Paper Edition** for the People :—

SUBSCRN. PRICE : YEARLY RS. 4 ; HALF-YEARLY RS. 2-2.

SINGLE COPY, CURRENT NO. $5\frac{1}{2}$ AS. ; BACK NOS. 6 AS. EACH.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION *5s. 6d.* NET PER ANNUM.

**If strictly Prepaid** at the commencement of the term, (*i. e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As. off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months' grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May ; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and save vexatious delay and needless ndence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

தளமான காகிதப்பதிப்பு :—அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி $7\frac{1}{2}$ அணா. பழைய பிரதி 8 அணா.

லேசானகாகிதப்பதிப்பு :—ஸாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி $5\frac{1}{2}$ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறாமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

ஏப்ரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தாதாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்துகொடுக்கப்படும்,

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது ஏப்ரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும் ; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்குவரவுக்கும் இடமிராது.

READINGS AT HOME.

A GLIMPSE INTO THE FUTURE.

## தமயந்தி.

20-ம் நாள் படிப்பு.

இருபதாம்நாட் பகலில் ருக்மணி யம்மாளும், சிவகாமியும், சுப்பலக்ஷ்மியும் கைலாசத் தாத்தாவும் ஆகிய நால்வரும் யதாப்பிரகாரம் கதாசிரவணத்துக்கு வந்துட்கார்ந்ததும் சுப்பலக்ஷ்மி பின்வருமாறு படிக்கத் தொடங்கினாள்.

"நளமஹாராஜா தமயந்தியைச் சார்ந்தவுடனே அந்த மாசில்லாத பதிவிரதாசிரோமணியும் அவனை நோக்கி, "குறைவில்லாத அன்புடையாளாய், யாதும் குற்றமற்றவளாய், கணப்போதேனும் நீங்கியிருக்கப் பொருதவளாயுள்ள மனைவியை நடுக்காட்டில் அர்த்தராத்திரிவேளையிலே அயர்ந்து தூங்கிக்கொண்டிருக்கும் சமயத்தில் விட்டுப்பிரிந்துபோதற்கு அறநெறியினின்று நீங்காத நளமகாராஜாவே யன்றி யாவர் துணிவார்கள்?" என்று சொல்லிக் கண்களினின்று கண்ணீர் இடையறாதொழுக, மாசூழ்த்த மேனியும், துணிபட்ட ஆடையுமாகி நின்றனள். அவளை அக்கோலமாகக் கண்டதும் அரசன் பெருமூச்சு விட்டு "நங்காய் நான் உன்னை என்சுயமாகவிட்டு நீங்கவில்லை. மாயக்கலியின் வசப்பட்டவனாய்க் காட்டிடையே அர்த்தராத்திரியில் விட்டு நீங்கினேன். அக்கலி என்னை விட்டு நீங்கினதும் இதோ உன்னைவந்தடைந்தேன். கிறக. நீ இரண்டாவது சுயம்வரம் வேண்டியதென்ன? இது கற்புடையாருக் கடுக்குமோ?" என்றனன். அதுகேட்டுத் தமயந்தி, "என்னை நோக்கின் சுயம்வரம் கொள்பவள்போலத்தான் தோற்றுகின்றதோ? தேவரீரை அயோத்தி நகரில் கண்டேனென்று ஓர் அந்தணன் வந்து சொல்லுதலால், இங்கு சீக்கிரம் தருவிக்கும்பொருட்டுச் சொன்ன வார்த்தையேயன்றி உம்மை எழுபிறப்பிலும்பிரிதற் கெண்ணுவேனோ? என்பேரில் சந்தேகம் கொள்ளலாமோ?" என்று விம்மி விம்மி அழுதனள். அரசனும் சமாதானமாகத் தமயந்தி, "அடியேன் தேவரீரது திருவுருவத்தைக்காண இச்சிக்கின்றேன். இவ்வுருவை நீத்து அவ்வுருவைக்காட்டவேண்டும்" என்ன, அவ்வாறே அரசனும் பாம்பாற் கொடுக்கப்பட்ட வஸ்திரத்தை எடுத்துத் தரித்துக் கொள்ள அப்பொய்யுரு நீங்கி மெய்யுருவோடு மன்மதாகாரனாக நின்றனன்! தமயந்தி அப்போது அவன் பாதங்களில் வீழ்ந்து பணிந்து நின்றனள். இவ்விவரங்களையெல்லாம் வீமராஜன் கேள்வியுற்று தனது பந்துவர்க்கங்களாகிய அரசர்களோடு வந்து மருமகனைக்கண்டு மகிழ்ச்சி பூண்டனன்.

அப்போது, ஆகாயவாணி யொன்று அரசனை நோக்கி, "ஏ ராஜன் இந்நங்கையை இந்த மூன்றுவருஷமாக யாம் சிறிதும் கேடுறாமற் காத்தனம். சுயம்வரமென்று செய்தி பிறப்பித்தது உன்னை யிங்கு தருவித்தற்கேயன்றி வேறல்ல. ஆதலின் வடதிசையிலொளிர்கின்ற அருந்ததியினும் கற்பிற் சிறந்தவளாகிய இவள்மீது நீ எள்ளளவேனும் சந்தேகம் கொள்ளற்க" என்று நளன்கேட்டு மகிழுமாறு கூறியது. அந்த வேளையில் தேவர்களெல்லாரும் கடல்போலத் துந்துபிமுழங்க ஆகாயத்தினின்று மலர்மாரி பொழிந்தனர். வீமராசனும் ஆநந்த வெள்ளத்தில் குளித்தானுபினன். நளனும் சஞ்சலமொழிந்து தமயந்தியை அடைந்து மகிழ்ந்தனன்.

சிவகாமி.—அம்மா, ஆகாயவாணி யொன்று சொல்லவேண்டிய காரணமென்ன? அங்கு யாம் காத்தோமென்று சொல்லியவர் யாவர்? அதன் விவரம் சொல்லவேண்டும்.

தாயார்.—சொல்லுகிறேன் கேள். கற்புடையார்களைத் தெய்வங்கள் காக்குமென்பது நமக்குட்கொள்கை. இக்கொள்கை நமக்குள்ளே யன்றிப் புறமதத்தாருள்ளு

முள்ளது. அங்கிலேயகவி யொருவர் கூட இக்கொள்கையை அனுசரித்துக் கற்பின் மேன்மையைச் சிறப்பித்திருக்கிறதாகக் கேள்வி.

சிவ.—ஆமாம் அவர் கூறிய பாடல் நீயெனக்கு முன்னொருதரம் சொல்லியிருக்கிறாய் ஞாபகமுள்ளது.

"மறுவில் சீர்கற்பின் வலியனுக் கெதிரா வழுத்த
லாந் தகையதொன்றுளதோ
அறமிலாத் தீய பேய்களும் பூதகணங்களும் அசுர
ரும்கொடிய
திறலுறுங் கூளிபிரேதமென்றுரைக்கும் செயிர்தரு
தெய்வத மெதுவும்
உறுகலாதாங்கு கரந்திடு மென்ன உரைப்பரேநூலு
ணர்ந்தவரே."

தாயார்.—ஆமாம் இப்பாட்டில் கற்புடையார்களைத் துர்த்தேவதைகளொன்றும் அண்டமாட்டாதென்று கூறியுள்ளது. இப்புலவர்தாமே கற்புடையார்களைச் சிஷ்ட தெய்வங்கள் காக்குமென்றும் கூறியிருக்கின்றனர். அப்பாடலும் முன்னொருதரம் சொல்லியிருப்பதாக ஞாபகம் உனக்குத்தெரியுமா சுப்பு?

சுப்பலக்ஷ்மி.—நில்லு சொல்லுகிறேன். இது தானே அம்மா:—

"காசறுமனத்திற் றூய கற்புடைமகளிர்தம்மை
மாசுறுவினைகளொன்றும் மருவிடாதினிதுகாப்பர்
நேசமுற் றமரரெல்லாம்; நிருமலன்தனக்குமற்றவ்
வேசலில் கற்பின் மிக்க இனிய தொன்றில்லை
யன்றே."

தாயார்.—இந்தப்பாடல் தான். ஆதலின் கற்புடையார்களைக் காத்தலைத் தமக்குக் கடமையாகக் கொண்ட சில தெய்வங்களுள்ள வென்று நம்பத்தக்கது. அத்தெய்வங்கள் தான் தமயந்தியை வேடனில் நின்று காத்ததும், இங்கு ஆகாயவாணியாகக்கூறியதும் என்று கருதத்தக்கது.

தாத்.—வெள்ளைக்காரருக்கும் நமக்கும் தெய்வமொன்று வேறாதலொழிய மற்ற தர்மாதர்மங்களெல்லாம் ஒன்றுதான் போலிருக்கிறதே. அவர்களுள்ளேயும் அநேக நீதிமார்க்கங்கள் தர்மசாஸ்திரங்கள் ஏற்பட்டிருக்கும் போலிருக்கின்றதே.

ருக்குமணி.—ஆக்ஷேபனையென்ன. நீதியும் தருமமு மில்லாமலா உலகத்தை யெல்லாம் கட்டிக்காத்து வருகிறார்கள்? தெய்வம்தான் அவர்களுக்கு வேறு நமக்கு வேறாகுமா? பெயர்மாத்திரம் வேறே யன்றி எல்லாமொன்றுதான். வேறென்று சொல்லிப்போராடுவோரெல்லாம் மெய்மையுணராதவர்கள். அரி வேறு சிவன் வேறென்று நமக்குட்கருதுதல் போலத்தான்.

சிவ.—நமக்குள்ளே சாவித்ரி, தமயந்தி, சீதை, சந்திரமதி, நளாயினி முதலான அநேக பெண்கள் கற்பின் மேன்மையால் அநேக அற்புதங்களைச் செய்ததாகச் சொல்லியிருக்கின்றதே. அவ்வாறு ஐரோப்பியர்களுக்குள்ளும் விருத்தாந்தங்கள் உண்டோ?

தாயார்.—அவர்களுள்ளேயும் முற்காலத்துக்கிரேக்க உரோம நூல்களில் அநேகவிருத்தாந்தங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றுள் ஒன்றிரண்டு எனக்குத் தெரிந்தவளவில் சொல்லுகிறேன். கிரேக் 'டையானா' (Diana) என்னும் ஓர் மடந்தை அம்பும் வில்லும் கொண்டு வனத்தில் திரிந்து வேட்டையாடி விநோதிப்பது வழக்கமாம். அவள் பிடித்த வில்லைக்கண்டு அஞ்சாதவரில்லை. அவ்வில்லிற் பூட்டும் அம்புகளெல்லாம் வெள்ளியினாற் செய்தவைகளாம்! அவள் வனங்களுக்கெல்லாம் அதிபதியாகி அரசு செலுத்திவருபவளாம். பாதிவிர்த்தியத்தில் அவளுக்கு மிஞ்சினபேர்கள் இல்லையாம். அவளது கற்பின் மகிமையினாலே காட்டில் உள்ள கொடிய பயங்கரமான

சிங்கங்களும், மலைகளில் உள்ள வரிப்புலிகளும் அவளைக்கண்டால் அஞ்சியொடுங்கி அமைந்து நடக்குமாம். காமதேவனும் கூட அவளது நிறையை அழிக்க எவ்வளவோ முயன்றும் முடியாமல் கைசலித்து விட்டுவிட்டானும். காமபாணங்களுக்கு அவள் சிறிதும் மனம் சலிக்கவேயில்லையாம். அவளது பெருமையைக்கண்டு மனிதரேயன்றித் தேவர்கள் கூட அவள் கோபத்தைத் தாங்க முடியாமல் அஞ்சி நடுங்குவார்களாம். அவ்வளவு வன்மையும் சிறப்பும் அவளுக்கு அவளது கற்பின் வலியினாலேயே உண்டாயினவாம்.

தாத்.—ஏது இவளுடையபெருமை அசாத்தியமாயிருக்கிறதே. காமபாணங்களை லக்ஷ்யம் பண்ணாதவர் நமக்குள் பரமசிவன் ஒருவரைத்தான் சொல்லுகிறார்கள். அவர் கூடச்சிறிது மனஞ்சலித்து யோகத்தைவிட்டதாகச் சொல்லியிருக்கின்றது. நிற்க மற்றவர் செய்தியும் சொல்லு கேட்போம்.

ருக்.—'மினர்வா' என்று இன்னொரு மடந்தை. அவள் கையில் ஒரு கேடயம் உண்டென்றும், அதில் மயிருக்குப்பதிலாகச் சர்ப்பங்கள் மொலு மொலு வென்று பிணைந்து பின்னிக்கொண்டுள்ள மகாபயங்கரமான குறைத்தலை யொன்று வைக்கப்பட்டுள்ளதென்றும், அத்தலையின் மகத்துவத்தால் இப்பெண் தன் பகைவரை யெல்லாம் கருங்கல்லாக மாற்றிவிடுவாளென்றும், ஆதலின் இவளை வெல்பவர் ஒருவரும் இல்லையென்றும் ஒருவிருத்தாந்தமுண்டு. இதன் உண்மையை ஆராயுங்கால், இது அவளது கற்பின்வலிமையையே தெரிவிப்பது. இங்கு கேடய மென்றது மினர்வாவென்னும் இந்தக் கற்புக்கரசியின் பார்வையே யன்றி வேறல்ல. இதன் கருத்தென்ன வென்றால் இப்பெண் ஒருவரைச் சினந்து பார்த்த மாத்திரத்தில் அவர் தமது கொடுமையும் வலிமையுமிழந்து சிலைபோலச் செயலற்று நின்று அவளை பத்தியோடு போற்றி நிற்பார் என்பதாம். இன்னம் இது போல அநேக ஐதிகங்களும் கதைகளு முள்ளவாயினும் இவையிரண்டுமே இங்கு போதுமானது.

தாத்.—அகலிகை கற்பிழந்து கல்லாகச்சபிக்கப்பட்டாள். இவளோ கற்பினாலே எவரையும் கல்லாகமாற்றவல்லவள். ஆகா! இவள் பெருமை பெருமைதான். ஆக்ஷேபணையில்லை.

தாயா.—இன்னம் பாதிவிருத்தியத்தின் மகிமையைச் சொல்லின் விரியுமாதலின் இன்னொருசமயத்திற் பிரஸ்தாபிப்போம். மேலே வாசிசுப்பு.

"இங்கு இவ்வாறு நிகழ்ந்த செய்திகளைக் கேட்டு இருதுபன்னமகாராஜன் ஓடிவந்து நளமகாராஜன் பாதங்களில் வணங்கி யெழுந்து "ஏ ராஜன், நான் உன்னை இன்னானென்றறியாமல் செய்த குற்றங்களை யெல்லாம் பொறுத்தருளல்வேண்டும்." என்று வேண்டிக்கொள்ள, நளனும் அவனைத் தனது செங்கரங்களால் தழுவி முகமலர்ந்து இனிய உரைகளைக்கூறி விடைகொடுத்தனுப்பினான்.

"அங்கு மாமன் வீட்டில் ஒரு மாதகாலம் சிரமபரிகாரமாக விருந்தபின்னர் நளமகாராஜன் தனது நாட்டை மீளவும் பெறும்பொருட்டுச் சேனையைச் சேர்த்துக்கொண்டு அநேக மன்னர்கள் துணையாய் வர நிடத நாட்டை நோக்கிச்சென்று யாவிந்த நகரத்தின் மதிற்புறத்தில் பாளையமிறங்கி "ஒன்று, என்னோடும் போர்க்கு வருக; இல்லாவிடின் சூதாடிக்கெலிக்கவல்லையேல் அதற்காயினும் உடன்படுக." என்று புட்கரனுக்குத் தூது போக்கினான். புட்கரராஜன் அதைக்கேட்டு தன் மந்திரிமார்களோடு தனியாயிருந்து ஆலோசித்து நளனைப் போரில் வெல்லுதல் அசாத்தியமாதலின் சூதில் வெல்லுதலே நலமென்று துணிந்து

சூதாட வரும்படி வதல்மொழி பகர்ந்து விடுத்தனன். அவ்வாறே நளனும் நகருட்புகுந்து புட்கரனைக்கண்டு "நல்லது நாமாடும் சூதாட்டத்துக்குப் பந்தயம் யாதெ"ன்று கேட்க அப்புட்கரன் "நீ உன்னுடைய மனையாளைப் பந்தயமாக வைத்தாடுக, நான் என்னுயிரையும் நாடு நகர் முதலான செல்வங்களையும் வைத்தாடுவேன்" என்றனன். அவ்வாறே இருவரும் சம்மதித்தாடலும், நளமகாராஜன் வென்றனன். அப்போது அவன் புட்கரனை நோக்கி "நீ முன்னே வென்றதும் உன் சாமர்த்தியத்தினாலன்று, கலிபுருஷன் உதவியினாலேயாம். நிற்க. உன்னுயிர் என்வசத்ததாயினும் நீ என் தம்பியாதலின் உன்னைக் கெடுத்தல் நியாயமன்று. ஆதலால் நீ மீண்டும் சென்று உன் நாட்டை ஆண்டுகொண்டிரு" என்று சொல்லியனுப்பினன். பின்பு கணிதர்களைக்கொண்டு சுபதினம் ஒன்று பார்த்து அத்தினத்தில் தான் நகருட் பிரவேசித்துத் தன் அரசாக்ஷியைக் கைக்கொண்டனன். பின்பு தமயந்தியையும் மக்களையும் தருவித்துக்கொண்டு மனைவியோடும் மக்களோடும் சுகித்திருந்து அநேக தர்மங்களைச்செய்து யாகங்கள் பலவும் புரிந்து உலகமெல்லாம் தன் குடைநிழலிற் குளிர்தாங்க வாழும்படி மநுநெறி தவறாது நெடுநாள் இனிதுறைபாக ஆண்டுகொண்டிருந்தனன்."

சிவ.—நல்லவேளை. தமயந்திக்கும் நளனுக்கும் கஷ்டங்களெல்லாம் வெடிந்ததா! இன்னார் இன்னின்ன கஷ்டங்களை இன்னின்னபடி அனுபவிக்கவேண்டுமென்று பிரமன் தலையில் எழுதியிருப்பானென்பதில் சிறிதும் ஐயுறவில்லை. ஆயினும் கடவுள் ஒருவனையும் முற்றக்கெடுக்க மாட்டாரென்பதும் உண்மையே. முன்னே கஷ்டப்பட்டால் பின்னே சுகமுண்டாகுமென்பதும் நிச்சயம்.

தாயார்.—அதற்குத் தடையென்ன? உலகில் சுகதுக்கமென்பன வஸ்திரத்தின் ஊடும் பாவும்போலப் பிணைந்து நின்று ஒன்றின் பின்னொன்றாய் வருதல் நிச்சயம். துக்கமென்பது ஒன்றில்லாவிடில் சுகமென்பதற்கருத்தமேயில்லை. ஒருவர் எப்போதும் சுகமே அனுபவிக்கிறார்களென்றெண்ணுவது அவரது ரகஸ்யங்களை நாம் செவ்வே அறியாமையினாலன்றி வேறல்ல. தர்மத்தை ஆசரித்து கடவுளை நம்பி அவரது அருளை வேண்டி நிற்பவர்களுக்கு விதிவசத்தினால் தீங்கு நேரிடுமாயினும் அத்தீங்குகள் நளமகாராஜனும் தமயந்தியும் நீங்கப்பெற்றது போல நீங்கப்பெற்றுச் சுகமடைவார்கள்.

முற்றும்.

எஸ். முத்து ஐயர், பி. ஏ.

---

## A DISCOURSE ON BIRDS.

## பக்ஷிகளைப்பற்றி.

---

### காகம்.

பக்ஷிகளைப்பற்றி ஆங்காங்கு தமிழ் நூல்களிற் கூறப்பட்டுள்ளவைகளிற் சிலவற்றை இங்கு விவரிப்போம். பக்ஷிகள் எல்லாவற்றிலும் நமக்கு நன்றாகத்தெரிந்தது காகம். இதனிடத்து அநேக நற்குணங்களுள்ளன. இது அதிகாலையிலெழுந்து காகா வென்று கத்தி நம்மைநம் வேலைகளுக்கு எழுப்புவது யாவர்க்கும் தெரிந்த விஷயமே. இது வன்றி தனக்குக் கிடைத்த தொன்றைப் பிறருக்குக் காட்டாமல் தானே தின்னும் கெட்ட சுபாவம் இதனிடத்தில்லை. தன்னினங்களைக் கூவி யழைத்து அவற்றோடு பகிர்ந்துண்ணும் தன்மையுடையது. இவ்வுத்தமகுணத்தைத் திருவள்ளுவநாயனார் திருக்குறளிலே சுற்றந்தழால் என்னும் அதிகாரத்தில் குறிப்பிட்டிருக்கின்றனர்.

காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்ன நீரார்க்கேயுள.

எங்ஙனம் காக்கையானது தனக்குக்கிடைத்ததோர் உணவை தன் சுற்றங்களுக்கொளி

யாமல் அவற்றைக் கூவியழைத்து அவற்றோடு பகிர்ந்துண்கின்றதோ அதுபோல் எவரொருவர் தமக்குக் கிடைத்த செல்வத்தைத் தம் சுற்றத்தாருக்குக் கொடுத்துத் தாமும் அனுபவிக்கின்றார்களோ அவர்களுக்கே செல்வம் மேன்மேலும் விருத்தியாகும் என்று திருஷ்டாந்தமாகக் கூறியிருக்கின்றனர். இன்னம் காக்கைக்கும் கூகைக்கும் நெடுநாளாகத் தீராவயிரம் உண்டென்பதை பஞ்சதந்திரத்தில் சந்தி விக்கிரகமென்னும் பாகத்தைப் படித்தவர் பலரும் அறிவாரன்றோ. இவ்விஷயத்தையும் வள்ளுவர் தமது முப்பானூலில் காலமறித லென்னும் அதிகாரத்தில் திருஷ்டாந்தமாகக்கண்டிருக்கின்றனர்.

"பகல்வெல்லும்கூகையைக்காக்கையிகல்வெல்லும்
வேந்தர்க்குவேண்டும் பொழுது"

இராக்காலத்தில் தன்னை யெதிர்த்துவெல்லுகின்ற கூகையை எப்படிக் காகமானது அதற்குக் கண் தெரியாத பகற்காலத்தில் சமயமறிந்து கொல்லுகின்றதோ அவ்வாறே அரசர்களும் சமயமறிந்து பகைவர்களை வெல்லவேண்டும் என்றபடி. இன்னம் இப்பக்ஷியானது எச்சில் மலம் பிணம் முதலிய துர்க்கந்தமும் அசுத்தமுமான பதார்த்தங்களை விருப்பியுண்டு நமக்கு வெகு உபகாரத்தைச்செய்வது. இதனால் நமக்கு மிக்க நன்மையேயாயினும் இக்குணம் தீக்குணமே யாதலால் இதனை ஔவையார் மூடரைமூடர்விரும்புதற்கு உதாரணமாகக் கூறியிருக்கின்றனர்.

"நற்றாமரைக் கயத்து நல்லன்னம் சேர்ந்தாற்போற்
கற்றாரைக் கற்றாரே காமுறுவர்-கற்பில்லா
மூர்க்கரை மூர்க்கருகப்பர் முதுகாட்டிற்
காக்கையுகக்கும் பிணம்."

தாமரைவாவியை அன்னபக்ஷியானது விரும்பி யடைதல்போலக் கற்றுணர்ந்த அறிவுடையோர்களை அவர்போலும் கற்றுத்தேர்ந்த அறிவுடையார்களே விரும்புவார்கள். அன்றி எப்படி அருவருப்பான தீக்குணமுள்ள காக்கையானது அருவருப்பான பதார்த்தத்தையே இச்சிக்கின்றதோ அதுபோல கற்றறிவில்லா மூடர்கள் தம்போலும் மூடர்களையே இச்சிப்பார்கள் என்றபடி.

## கொக்கு.

இதுதவிர நூல்களில் திருஷ்டாந்தமாகச் சொல்லப்படும் இன்னொரு பக்ஷி கொக்கு. இது ஓநாயால் ஏய்ப்புண்ணப்பட்டதாகச் சொல்லியிருப்பினும் மிக்க கபடகுணமுள்ளது. இது மீன்களை வஞ்சனையால் ஏமாற்றித் தன்னிருப்பிடத்துக்குத் தனக்குணவாகும்படிக்கொண்டுபோய்ச்சேர்த்து முடிவில் அச்சூதை யறிந்த ஓர் நண்டால் மாண்ட செய்தி பஞ்சதந்திரக் கதையிற் பார்த்திருக்கலாமே. இது நீர்த்துறைகளில் ஒற்றைக்காலால் தவஞ்செய்வது போல் நின்று கண்ணை மூடிக்கொண்டு தூங்குதல் போலப் பாவித்துச் சமயம்நேர்ந்ததும் மீன்களை நறுக்கென்று ஒரே கொத்தாய்க் கொத்தி வாயிற்போட்டுக் கொண்டுவிடும் அன்றோ? இவ்விஷயத்தையும் நாயனார் தமது பொய்யாமொழியில் காலமறித லென்னும் அதிகாரத்திற் கண்டிருக்கின்றனர்.

"கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்தவிடத்து."

அதாவது அரசர் தமக்குச் சமயம் நேராத காலத்தில் கொக்கைப்போல் அடங்கியிருந்து தகுந்தசமயம் நேர்ந்ததும் அக்கொக்கு எவ்வாறு குறிதவறாமல் கொத்தித் தன்னிரையைக் கொல்லுகின்றதோ அவ்வாறு சமயம் கண்டு பகைவரை வெல்லல்வேண்டும் என்றபடி. இக்கருத்தையே ஔவையாரும் கூறுகின்றனர்.

"அடக்கமுடையா ரறிவிலரென்றெண்ணிக்
கடக்கக்கருதவும் வேண்டா-மடைத்தலையில்
ஓடுமீனோட வுறுமீன்வருமளவும்
வாடியிருக்குமாம் கொக்கு."

## மயில், குயில்.

இனிக்காவியங்களில் சோலைவர்ணனைகளில் முதன்மையாக சிறப்பவை மயிலும் குயிலும்.

மயில்கள்தம் அழகாகிய சிறகுகளை விரித்து நாட்டியப்பெண்கள்போல விநோதமாக ஆடு தலைப் பலரும் பார்த்திருக்கலாம். இத்தன்மையைச்சுட்டி நைடதத்தில் சோலைவர்ணனையில் அதிவீரராமபாண்டியர் வெகு இனிமையாகக் கூறுகின்றார்.

"அலையொலிமுழ வெழவளியின்கம்பலை
குலவிய சுருதியாக்குயில்கள் பாண்செய
நிலவுபூந்தண்டலை யாங்கினீடிய
கலவமாமயிலகளித்தாடக்கண்டனன்."

அதாவது பூந்தடத்திலெழுந்து மோதுகின்ற அலை முழக்கம் மத்தளவோசைபோலச் சத்திக்க வண்டுகளின் ரீங்காரத்தொனி சுருதி கூட்டியதுபோல ஒலிக்கக் குயில்கள் இனிமையான ராகங்களைப்பாடச் சோலையாகிய அரங்கினிடத்தே நீண்ட தோகைகளை விரித்து மயில்கள் நாட்டியப் பெண்கள்போல ஆடுவதை அரசன் கண்டான் என்றபடி. குயில் இனிய குரலுக்குப் பெயர்போனது. காக்கையும் குயிலும் ஒருவாறு உருவத்தில் ஒத்திருக்கும் ஆயினும் இரண்டினோசைக்கும் எத்தனை பேதம்! இவ்விஷயத்தை உருவத்தா லொத்துக் குணத்தால் வேறு படுவாருக்கு உவமையாகக் கவிகள் சொல்வது வழக்கம்.

"வாக்கு நயத்தாலன்றி மற்றவரிற் கற்றவரை
ஆக்கை நயத்தாலறியலாகாதே-காக்கையொடு
நீலச்சிறு குயிலை நீடிசையாலன்றியே
கோலத்தறிவாரோ கூறு."

இக்குயிலைக் காமநூலார் மன்மதனுக்குக் காளவாத்தியமாகக் கூறுவர்.

"தேரிளந்தென்றலாகச்செழுங்குடைமதியமாகத்
தூரியங்கடல்களாகச் சொற்குயில்காளமாக
நாரியர் சேனையாக நறைவண்டு விடுதூதாகப்
பாரினில்விசயம் செய்யுப்படைமதன் சரணம்
போற்றி."

என்று மதனநூலில் கூறியிருக்கின்றனர். மயிலானது சார்காலத்துப் பக்ஷி, குயில் கோடைகாலத்துப் பக்ஷி. மயிலுக்கு நீருண்ட மேகத்தைக் காணின் மிக்க களிப்பும் குயிலுக்குத் துயரும் உண்டாகும். இவ்விஷயத்தை நைடதத்தின் நாட்டுப்படலத்தில் குறிப்பிட்டிருக்கின்றனர்.

"பூங்கரும் புடைந்த தீஞ்சாறடு புகையுயலென்றெண்ணி
மாங்குயிற் றெழுதியாவும் வாய்விடாதொழிந்த மஞ்ஞை
தூங்கிசைவண்டும்தேனும் சுரும்பொடுஞிமிறும் பாடத்
தேங்கமழ் சோலைதோறும் சிறைவிரித்தாமோதோ."

அதாவது, ஆலையிலடித்த கருப்பஞ்சாற்றை வெல்லமாகக் காச்சுங்காலையி லெழுகின்ற புகையை நோக்கி அது புகையென்றுணராது முகிலென்று மயங்கி, மாமரத்தில்விரும்பி யிராநின்ற குயில்களெல்லாம் துயர் கொண்டு வருந்தி உல்லாசமிழந்து மௌனமாயிருக்கும். அப்புகையையே மயில்களும் கண்டு மயங்கிக் களிப்புடன் வண்டுகளின் பாடலிற்கேற்பச் சோலைகள்தோறும் நர்த்தனம் செய்யும் என்றபடி,

மேகத்தைக்கண்டு மயிலுவக்கும் என்னும் இவ்விஷயத்தைக் குறித்துப் பாரதத்தில், கிருஷ்ணன் தூதுச்சருக்கத்தில் கண்ணபிரானைக்கண்டு குந்திதேவிகளித்தனள் என்னும் கட்டத்தில்

"மண்டலமதியமன்ன மாசறு முகத்தினாளும்
திண்டிறன் மருகன்றன்னைச் சென்றெதிர்கொண்டுகண்டு
வெண்டிரைமகரவேலை விரிபுனன் முகந்துதோன்றும்
கொண்டலை மகிழ்ந்துகாணும் குளிர்பசுந்தோகை போன்றாள்."

அதாவது "பூரணசந்திரனைப்போல விளங்குகின்ற திருமுகத்தையுடைய குந்திதேவி தனது மருமகனாகிய கண்ணபிரான் வருதலைக் கேட்டு எதிர்கொண்டு சென்று கண்டு, கடல் நீரையுண்டு மேலெழுந்த கார்மேகத்தைக் கண்டு களிக்கும் அழகிய பசுந்தோகையைப் போன்றாள்." என்று வில்லிபுத்தூரார் எவ்வளவு இனிமையாகக் கூறுகின்றனர்!

குயிற்பக்ஷிகள் மாமரத்தை இச்சித்து மேவும் என்பது நூல்களிற் காணப்படும். அதனைப் பின்வரும் பாடலிற் குறிப்பிட்டுள்ளது.

"தேமிருக்கும் மாந்தளிரைச் செந்தீவனமென்றும்
பூமுருக்கையத்தீப் பொறியென்றும்— நாமிருக்கும்
மாப்படுமே யென்றெண்ணிவாடி மனம்தளர்ந்து
கூப்பிடுமே யந்தக்குயில்."

குயில் தன் குஞ்சுகளைத்தானே பேணாது காக்கையின் கூட்டில் முட்டை யிடுமென்றும் அவற்றைக் காக்கை யறியாமல் தன்னவாகப் பாவித்துக் குஞ்சு பொரித்து வளர்க்குமென்றும் வளர்ந்தபின் அக்குஞ்சுகள் காக்கையின் தலையி லொரு குட்டுக்குட்டி விட்டுப் போய்விடுமென்றும் சொல்லுவர். மேனாலார் இது மற்றப் பறவைகளின் கூட்டில் உறைந்திருக்கும் என்றும் அவற்றின் முட்டைகளை யுண்டுவிடுமென்றும் கூறுவர். மேனாலாரும் இதன் பாடலைப்பற்றி வெகுவாகச் சிறப்பித்துச் சொல்வர். 'வோர்ட்ஸ்வர்த்' Wordsworth என்னும் மகாகவி யொருவர்,

கோகிலமே நின்னையொரு புள்ளென்று கூறுகவோ
ஆகுமதுவல்லாத கல்வானில்-மோகமொடு
பண்ணாரப்பாடித்திரியு மொருவாணியென
எண்ணாரக்கூறுகவோவின்று.

என்று அதன் தொனியைச் சிறப்பித்துக் கூறுகின்றனர்.

அன்னம்.

தடாகங்களை வர்ணிக்குமிடத்து அன்னபக்ஷி முதன்மையாகக் கூறப்படும். தாமரையில்லாத வாவிபோலவே அன்னமில்லாத வாவியும் சிறப்படையாது.

ஏகேநராஜஹம்ஸேந
யாசோபா ஸரஸோபவத்
நஸாபகசகஸ்ரேண
பரிதஸ்தீரவாசி நா.

ஆருமன மொன்றுலடையு மெழில்வாவியதன்
நீரமதிற்சேர்ந்து செறிந்திடுமோர்—சீரகலும்
பல்லாயிரம் பகத்தாற்பாராய் நீசாரதே
நல்லா யிவ்வுண்மையினை நாடு.

என்று வடநூலாரும் கூறியிருக்கின்றனர். இவ்வன்ன பக்ஷி நீரைப்பிரித்துப் பாலை யுண்ணும் சத்தியுடைய தென்பார்கள். இவ்விஷயத்தை நாலடியாரில் கல்வி யென்னும் அதிகாரத்தில் கண்டிருக்கின்றனர்.

"கல்விகரையில் கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற்பிணி பல-தெள்ளிதின்
ஆராய்ந்தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண்குருகிற்றெரிந்து"

நாம் கற்கவேண்டிய நூல்களுக்கோ அளவில்லை. சின்னாட் பலபிணியையுடைய நமது வாணாளில் அவை அனைத்தையும் கற்றுத்தேறுதல் அசாத்தியமாதலின் அறிவுடையோர்கள் எவ்வாறு அன்னபக்ஷியானது நீரைப்பிரித்துப் பாலைமாத்திரம் உட்கொள்ளுமோ அவ்வாறே தமது தெளிந்த அறிவாலாராய்ந்து இம்மை மறுமைக்குப் பயன் தரக்கூடிய சிறந்தநூல்களை மாத்திரம் கற்றுத் தெளிவார்கள் என்றபடி,

இப்பட்சியானது தனக்கு மரணம் சமீபித்த காலத்தில் வெகு மனோகரமாகப் பாடிவிட்டு உயிரைவிடும் என்று அங்கிலேயராகிய மேனாலோர் கூறுவர். இவ்வைதிகம் நமக்குள்ளே காணப்படவில்லை. இவ்வன்ன பக்ஷியை கவிகள் இவ்வளவு சிறப்பித்து அடிக்கடி கூறினும் இப்பக்ஷியை நமது தேசத்தில் விசேஷமாகக் காணோம். ஐரோப்பா ஔஸ்த்ரேலியா தேசங்களிற் காண்பனவாகச் சொல்லுகின்றனர்.

இப்பக்ஷிகள் மேற்கூறியபடி சோலைவர்ணனை வாவிவருணனைகளில் சிறப்பிக்கப்படுவதேயன்றிப் பெண்களை வர்ணிக்கு மிடத்தும் மிகுதியாகக் கூறப்படும். மயில் சாயலுக்கும் குயில் குரலுக்கும் அன்னம் நடைக்கும் உவமையாகக் கூறப்படும். கிளியும் நாகணவாய்ப் புள்ளும் இனிய குரலுடையனவாதலன்றிச் சிறிது பேசும் திறமையும் உடையனவாதலின் இவற்றையும் பெண்களுடைய சொல்லுக்குவமையாகக் கூறுவர். இத்திற

மையைக்குறித்து நைடதத்தில் அநேகம் இனிய கற்பனைகளுள்ளன.

"நஞ்சுமிழ்வேலினன்சீர்த்திநாடொறும்
அஞ்சொலார் பயிற்றலாலந்தண் காவினில்
மஞ்சரியிடை யிடைவதிந்த பூவையும்
பைஞ்சிறைக்கிள்ளையும் பாடக்கேட்டனன்."

"நளமகாராஜன் சோலைக்குச் சென்றகாலத்தில் அங்கு கிளிகளும் பூவைகளும் அவ்வூர்ப் பெண்களாற் பிடித்துப் பழக்கிவிடக்கப்பட்டவாதலின், அரசன் பெருமையைக்கூறி பூங்கொத்துக்களையுடைய கிளைகளுக்கிடையேயிருந்து பாடிக்கொண்டிருப்பதைக் கேட்டனன்." என்றபடி.

இன்னொரு சமயத்தில் அந்நளன் தமயந்தியிடம் தேவர்களின் நியோகத்தால் உருக்கரந்து தூது சென்றகாலத்தில் அங்கு பெண்களாற் பயிற்றப்பட்டிருந்த கிளிகள் "நளன் வந்தான், நளன் வந்தான்" என்று கூறிக்கொண்டிருப்ப அரசன் மனிதர்காணாது மறைத்த தன்னுருவை அக்கிளிகள் கண்டவோவென்று சந்தேகப்கொண்டான் என்னும் கருத்தோடு,

"மண்டமர்கடந்தவேல் நளன் வந்தானெனத்
தொண்டைவாய் மடந்தையர் நாளும் சொல்வன
பண்டரு மொழிக்கிளி பயின்று கூறலும்
கண்டதோ விஃதெனக்காளை யெண்ணினன்."

என்று வெகு இனிமையாகக் கூறியிருக்கின்றனர். பேசும் பக்ஷிகளில், அமெரிக்கா தேசத்தில் நகைப்புக்காட்டு பக்ஷி (Mocking bird) என்று ஒன்றுள்ளதாகவும் அது அநேகம் தொனிகளை விசித்திரமாகச்செய்து காட்டுமென்றும் சொல்லுகிறார்கள். நாய்போற் குரைக்கவும், பூனைபோல கத்தவும், கோழிபோற் கூச்சலிடவும், மனிதரைப்போற் பேசவும் பாடவும் மாட்டோமாம். இதன் தொனியைக்கேட்டு வேடர்களேயன்றி மற்றப்பட்சிகள் கூட மயங்கி மோசம்போகுமாம்.

வானம்பாடி, சக்ரவாகம், அன்றில்.

வானம்பாடி யென்று இன்னொருபட்சி அதிகாலையில் ஆகாயத்தில் உயரப்பறந்துகொண்டே இனிமையாகப்பாடித் திரியுமென்று மேனாலார் (அங்கிலேயர்) மிகச்சிறப்பிப் பாராயினும் நமது நூல்களில் அதன் பாடற்றிறமையைப் பற்றி விசேஷமாகச் சொல்லக்காணேம். ஆயினும் இதற்குப் பெயரே வானம்பாடி யென்றிருத்தலின் இஃது இனிமையாகப் பாடும் திறமையுள்ள தென்றே கொள்ளல்வேண்டும். இப்பறவையை வடநூலார் சாதகப்புள்ளென்பர். இது மழைத்துளியையே யன்றி வேறு நீரையுட்கொள்ளாதென்றும் அதனால் மழைவரவை எப்போதும் எதிர் நோக்கியிருக்குமென்றும் சொல்லுவர். சகோரம் அல்லது சக்கரவாகமென்னும் இன்னொரு பறவை நிலவையுண்டு மகிழுமென்பர். அதாவது நிலவைக்கண்டு மகிழுமென்றே கொள்ளத்தக்கது. இக்குணங்களைப்பற்றிக் கந்தபுராணிகர், இராணி தன் காதலன் தன்னைப்பிரிந்து கைலைக்குச்செல்ல வுத்தேசித்தகாலத்தில் பிரிவாற்றாமையால் வருந்துதலை வர்ணிக்கும்போது எடுத்துக் கூறுகின்றனர்.

"வாகத்துநேமிக்கும் வான்பாடுபுள்ளினுக்கும்
மேகத்திறமும் வியன்மதியுமாவது போல்
நாகத்துறைவோர்க்கு நாயகமே நீயலதென்
சோகத்தை நீக்கித் துணையாவார் வேறுண்டோ"

என்று கூறுகின்றனர். இப்பக்ஷிகளின் இக்குணங்களையே ஆசாரிய சுவாமிகள் தமது சிவானந்தலகரி யென்னும் தோத்திரமாலையில் பத்திலக்ஷணத்தை விவரிக்கும் காலையில் எடுத்து மேற்கோளாகக் காட்டியிருக்கின்றனர்.

தாமரைத்தடமவாவு மன்னமது சாதகம்புயலவாவுமால்
காமுறுந்திகிரிவாகம் வெங்கதிர் சகோரமென்றுநனிகருதுமே
மாமதிக்கிரணமன்னவாறெனது வன்மனம் பெறவிழைந்திடும்
தூமறைக்குமரிதான விடருள் துணைப்பதங்களுமைநாதனே.

"ஓ கௌரிநாதா, ஹம்ஸமானது பத்மவனத்தையும், சாதகமானது வர்ஷிகமேகத்தையும், சக்ரவாகமானது சூரியனையும், சகோரம் சந்திரனையும் எப்படி அபிலஷிக்குமோ அப்படியே என் சித்தமும் உபநிஷத் மார்க்கங்களிலும் தேடுதற்கரிய கேவல நிர்க்குணப்ரம்ம பாவமென்னும் சுகத்தைக் கொடுக்கும் உன் பாதாரவிந்தங்களைக் கோருகின்றது." என்றபடி. இங்கு சகோரம் வேறு, சக்ரவாகம் வேறென்றும் சக்ரவாகம் சூரியனைக்கண்டு மகிழும் என்றும், சகோரமென்பது சந்திரனைக்கண்டு களிக்கும் என்றும் கூறப்பட்டுள்ளது. அன்றில் என்னும் பக்ஷி ஆண் பெண் இணைபிரியாவென்றும், பிரிய வரின் பிரிவாற்றாமையால் மிக வருந்துமென்றும் கூறுவர். அன்றியும் குயில்களுக்கு மாமரத்தை விரும்பும் இடமாகக் கூறுவதுபோல இதற்குப் பனைமரத்தை இடமாகக் கூறுவர். இஃது ஸ்திரீ புருஷருடைய காதலைச் சிறப்பிக்கும் காலத்தில் குறிப்பிட்டுக் கூறப்படும். இப்பக்ஷியை வடநூலார் கிரௌஞ்ச மென்பர்.

### சேவல்.

சேவல் விடிய ஜாமத்துக்குத் துயிலுணர்ந்தெழுந்து சிறையடித்துக்கூவிக் காக்கைக்கு முன்னமே யாவரையும் துயிலெழுப்பும். இத்தன்மையைச் சுட்டிக் கம்பராமாயணத்தில், ஸ்ரீராமபிரானுக்குக் கைகேயியின் சூழ்வினையால் பட்டாபிஷேகம் இல்லாமற்போன காலத்தில் காலை வர்ணனையில் மிக இனிமையாகக் கூறுகின்றனர்.

"எண்டருங்கடை சென்றயாமமியங்குகின்றனவேழையால்
வண்டுதங்கிய தொங்கன்மார்பன் மயங்கி விம்மியவாறெலாம்
கண்டு நெஞ்சு கலங்கியஞ் சிறையானகாமர்துணைக்கரம்
கொண்டுதம் வயிறெற்றி யெற்றிவிளிப்பபோன்றன கோழியே."

அதாவது, மூன்றும் யாமத்துக் கூவுகின்றனவாகிய யாமக்கோழிகள் கைகேயியாலே சக்கரவர்த்தி மதிமயங்கிக் கலங்கியவிதமெல்லாவற்றையும் கண்டு நெஞ்சு கலங்கி அழகிய சிறைகளாகிய இரண்டு கைகளாலும் தம்முடைய வயிற்றில் பல முறையும் அடித்துக்கொண்டு அழுவனவொத்தன என்றபடி.

### வான்கோழி.

வான்கோழி யென்னும் இன்னொரு பட்சியைத் தாம் பெற்றில்லாத பெருமையைப் பெற்றதுபோலக் கருதியுவக்கும் வீணர்களுக்குவமையாகச் சொல்லுவர்.

"கானமயிலாடக் கண்டிருந்தவான்கோழி
தானுமதுவாகப் பாவித்துத்—தானுந்தன்
பொல்லாச்சிறகை விரித்தாடினாற்போலுமே
கல்லாதான் கற்றகவி."

என்னும் பாடல் யாவர்க்கும் தெரிந்ததே.

### பக்ஷிசகுனம்.

இனிப் பட்சிகளில் அநேகம் தமது தொனிகளாலும் கதிகளாலும் சுபாசுபங்களைத் தெரிவிக்கும் என்பது நமக்குள் நெடுநாளைக் கொள்கை. முற்காலத்துக் கிரேக்கர் உரோமர்கள் என்பவர் இக்கொள்கையைக் கொண்டிருந்தனர். தற்காலத்தில் கூட ஐரோப்பியர் இக்கொள்கையை முற்றும் துறந்ததாகத் தோற்றவில்லை. சாகுருவியென்னும் ஆந்தையைப்பற்றி நாம் நினைப்பதுபோலவே அபசகுனப்பட்சி யென்று அவர்களும் கருதுகிறார்கள். ஆயினும் நம்மைப்போல அவ்வளவு நம்பிக்கையில்லை. நமக்குள்ளே இப்பட்சிகளின் சுபாசுபசகுனங்களைப்பற்றி அனேக வசனங்கள் ஏற்பட்டுள்ளன. "வாயசம் வலமானால் ஆயிசு விருத்தியாகும், செம்போத்து வலமானால் சம்பத்து விருத்தியாகும், வெண்டலைக்கருடன் சென்றிடமானால் வெவ்வேர்கையிற் பொருளும் தன் கையிலாகும், காடைகட்டினாற் பாடைகட்டும், கட்டிக்காடை யிட

மானல், குட்டிச்சுவரும் பொன்னுதும், வால் நீண்ட கரிக்குருவி வலமிருந்தேயிடம் சென்றால் கால்நடையாய்ப் போனவர்கள் கனக தண்டியேறுவரே," என்று இவ்விஷயமாக அனேக வசனங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அன்றியும் பஞ்சபக்ஷி அதாவது வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில் என்னும் ஐந்து பட்சிகளின் ஊண் நடை உறக்கம் முதலியவற்றைக்கொண்டு பலாபலங்களைச் சொல்லும் சாத்திரமும் ஒன்று ஏற்பட்டுள்ளது. இனியும் பட்சிகளைப்பற்றிச் சொல்லின் விரியுமாதலின் இத்துடன் நிறுத்துகின்றோம்.

---

## THE HYMNS OF THE VEDA.

## வேதமந்திரங்கள்—II.

இவ்வாறு பூதசத்திகளை வெவ்வேறு தெய்வங்களாகப் பாவித்து வணங்கப்பட்டவற்றுள் முக்கியமான தெய்வம் இந்திரன். இவன் மழைக்கும் பனிக்கும் அதிதேவதையாகப் பாவிக்கப்பட்டமையானும், மழையும் பனியும் இந்து தேசத்தில் குடியேறிய ஆரிய உழவர்களுக்கு வடக்கே மத்திய ஆசியாவில் இருந்த அவரது முன்னோர்களாகிய உழவரினும் அத்யாவசியமாகவேண்டப்பட்ட பொருள்களாகையானும், இவற்றை அருள்வோனுகிய இந்திரன் வைதிக ஆரியர்களால் முதற்றெய்வமாகப் பாவித்துப் பூசிக்கப்பட்டனன் என்பதற்குச் சந்தேகம் இல்லை. வேதமந்திரங்கள் பெரும்பான்மையும் இத்தெய்வத்தையே துதிக்கின்றன.

ஆயினும், உஷ்ணமில்லாமல் மழையான்மட்டும் காரியமென்ன? இவ்வுஷ்ண சத்தி இத்தேயத்தில் வெகு கடுமையாகத் தோன்றுமாதலின், இந்துக்கள் இதனைக் கண்டு அஞ்சி இதற்குக்காரணமாகிய தீயைத் தெய்வமாகப்பாவிப்பது இயல்பேயாகும். ஆதலின், வைதிகர்களுக்கு இன்னொரு முதன்மையாகிய கடவுள் அக்னி ஆயினன். யாகாதி கிருத்தியங்கள் இவ்வக்னியின்றி இயற்றப்படாவாதலின், இவன் சிலவிஷயங்களில் மற்றத்தெய்வங்கள் எல்லாவற்றிலும் மேலாகமதிக்கப்பட்டனன். சூரியன் கூட, ஆதியில் ஒரு வேளை உஷ்ணத்துக்கெல்லாம் உற்பத்தி ஸ்தானமாகப் பாவித்து வணங்கப்பட்டிருப்பினும், பிற்காலத்தில் அக்னியின் ஒரு ரூபமாகவே பாவிக்கப்பட்டனன். இவன் அவ்வக்கினி சத்தியையே ஆகாயத்தில் சூரிய ரூபமாக அமைக்க அமைந்தவனென்றும், அதனால் அவ்வக்கினிபோல நமக்குத் தொட்டுப்புழங்குவதற் கருகமில்லாதவனாயினுனென்றும் மதிக்கப்பட்டனன். உஷஸ் ஸென்னும் இன்னொரு தேவதை சூரியனோடு சம்பந்தமுடையளாகவும் ஆகாயத்தின் புத்திரியாகவும் கருதப்பட்டனள். இவ்வுஷஸ்ஸோடு அசுவினி தேவதைகளென்னும் இரண்டு தேவதைகள் உறவுபடுத்தப்பட்டனர். இவர்கள் அழியா இளமையும் எழிலுமுடையோராய் ஓர் பொற்றேரில் ஏறி இவ்வுஷஸ்ஸென்னும் விடியற்றேவதைக்கு முன்னே செல்பவராகவும் கற்பிக்கப்பட்டனர். இவர்கள் தேவவைத்தியர்களாகவும் வியாதித்வம்சகராகவும் பாவிக்கப்படும்போது நஸ்ராகளென்றும், பிறிதிடங்களில் அசத்தியரல்லாதவரென்னும் பொருள்படும் நாசத்தியர்களென்றும் கூறப்படுவர். சூரியோதயத்துக்கு முன் தோன்றுவனவாக எண்ணப்பட்ட இரண்டு கிரணங்களையே இவ்வாறு உருவகப்படுத்திக்கூறியதாகத் தோன்றும். இவர்களோடு பிதிர்க்களுக்குத் தெய்வமாகிய எமனும் கூடி வேதத்தின் மந்திரபாகத்திற் கூறப்பட்டுள்ள முக்கியமான கடவுளர் ஆவர்.

இவ்வாறு ஆகாசம், வாயு, ஜலம், அக்கி என்னும் நான்கு பூதங்களும் சர்வலோககாரணனுகிய சர்வேச்வரனுடைய ரூபங்களாகப்பாவித்துப்பூசிக்கப்படின் பூமியும் அவ்வாறே ஒரு தெய்வதமாக இந்துக்களால் மதிக்கப்படவில்லையோ வென்று ஒரு கேள்வி பிறக்கக்கூடும்

பூமியும் பிருதிவியென்னும்பேரால் பூர்வீக இந்துக்களால் தெய்வமாகப்பாவித்து வணங்கப்பட்டு வந்தது. இந்தப்பிருதிவி எல்லா சிருஷ்டிகளுக்கும் தாயாகமதிக்கப்பட்டது. அன்றியும் அனேகதெய்வங்கள் பிருதிவிக்கும் தேஜஸ்ஸென்னும் சுவர்க்கத்துக்கும் உண்டான சந்ததியாகவும் கருதப்பட்டன. பூமியும் சுவர்க்கமும் ஒன்றையொன்று மணம்புரிந்து கொண்டதாகப்பாவிக்கும்பாவனை சுபாவமே. பின்னைப் புராணவிர்த்தாந்தங்களில் அநேகம் இச்சம்பந்தத்தால் நன்கு விங்கும். ஆயினும், பிற்காலத்தில் சுயநன்மைக்காகவே தெய்வங்களை ஆராதிப்பதென்று வந்தபோது இப்பூமி மனிதனுக் குட்பட்டதாயினதாலும் நம்மிச்சைக்குக்கட்டுப்படாதனவாகிய வாயு, தேயு, நீர் என்பவற்றைப்போல அவ்வளவு தீராப் பொறியாகத் திருப்திசெய்விக்க வேண்டாமையினாலும் தெய்வங்களுக்குள்ளே சிறப்பாகமதிக்கப்படும் பெருமையை இழந்து, மந்திரங்களிலும் எங்காவது அபூர்வமாகத் துதிக்கப்படுவதாயிற்று.

பின்வரும் மந்திரங்களின் பொருளைச் செவ்விதாக உணருவதற்கு ஒரு விஷயம் நாம் தெரிந்திருக்கவேண்டியது. மந்திரங்களிற் கூறப்பட்ட தெய்வங்களுக்கு வைதிக ஆரியர்கள் மனுஷ்யரூபகங்களைக் கற்பித்திருந்தபோதினும் அவற்றை பிரதிமைகள் அல்லது விக்கிரங்களை ஏற்படுத்திப் பூசிக்கவில்லை யென்று அறியத்தக்கது.

இனி அதர்வண வேதத்தின் நான்காம் புத்தகத்தின் பதினாறாவது கீர்த்தனமாகிய வருணஸ்தவத்தை முதலில் மொழிபெயர்த்துக் காட்டுவோம்.

"மேலிடத்திருந்து வியன்புவிபுரக்கும்
சாலவும் வலிகொள் தகைமலிவருணன்,
தன்னரசாட்சிக்குள்ளுறும் இந்தப்
பன்னெடும் புவிகளைப்பாங்கரினின்று
நோக்குவன்போல நோக்குவன்; மாந்தர்,
ஆக்கு நஞ்செய்கையை ஆரும்காண்கிலர்
என்றுளம் கருதி இழைப்பனவெல்லாம்
ஒன்றொழியாதே உணரும்திறத்தோன்;
நிற்பினும் நடப்பினும் நெறிபடச்செல்லினும்,
அற்குவியோர்பால் அரிதிற்கரப்பினும்,
ஒருவருமறியாக் குகையுள்ளொளிப்பினும்,
வருணன் காணாது மறைத்திடவசமோ?
இருவரோரிடத் தேதனிமையினிருந்து
வெருவரும் ஒரு செயல் கருதுவரெனினும்,
முறை செயுமரசர்முதல்வன் அன்னோன்,
இறையெனுமகலாதவ ரொமெிருந்து,
சர்ப்பனை யாவையும் மெய்ப்படக்காண்பன்;
எல்லையில் பெரும்புவியாவுமற்றவன்தே
அல்லலார் மாந்தரால் அளவிடற்கரிய
ஆழமேவிய அகல்விசும்பதுவும்
பாழியன்னவன் படைத்ததேயாகும்;
இருவகைக்கடலும் பரவவன்மேனியில்
மருவினும் அவனச்சிறு தடத்துறுமால்;
வானிடம் கடந்துசேணெறிச்செலினும்
மானமன்னவன் வருணனைத் தப்பிச்
செல்லவுமொண்ணுமோ மல்லலினெவர்க்கும்?
அன்னவன்தூதர் அளவிலர், அன்னோன்
துன்னிவாழும் தொல்பதியிருந்து,
மண்ணிடையிழிந்தாங் கெண்ணுமெவ்விடமும்
சென்று சென்று திரிந்தனராகி
ஒன்றியமாந்தர் உவற்றுவவெல்லாம்
ஆயிரம்கண்ணால் அமைதரநோக்கி
நேயமார நெறியிற்றெரிவார்;
இந்நிலத்துள்ளவும் இருவிசும்புள்ளவும்
அன்னதற்கப்பால் அமைந்துளயாவையும்,
கொற்றவன்வருணன் குறித்துணர்ந்துமால்;
எற்றவன் பெருமை! இமைக்கும் நம்மிமைப்பும்
இத்தனையாமென எண்ணிவைத்துளனால்!
அலகறும்புவன கோடிகளனைத்தையும்
இலகு மோர்பாச்சிகை என வெடுத்தாடி
களிக்குவனம்மா அளப்பரும் பெரியோன்!
இனையதன்மை யார் இறைவ! நின்மாயத்
தனிவளர்வலையைத் தன்மையில் நீசர்
மீதெறிந்தவரை வெய்துற அலைக்க;
ஏதமார் பொய்யர் இருந்திறலழிக்கப்;
பொய்யிலா நெஞ்சப்புண்ணியர்தம்மை
நையவென்றும் வருத்தலை ஆங்கே.

இனி இப்புராதனமான ஆரியதெய்வத்தை விட்டு இந்துக்களுக்கே முழுதும் உரிய தெய்வமாகச் சொல்லக்கூடிய இந்திரன் துதியில்

சிறிது கூறுவோம். பின்வரும்பாவில் ஆங்காங்கு சிதறிக்கிடக்கும் இத்தெய்வத்தினது துதிகளைத்திரட்டிக் கூறியுள்ளது :—

நீத்தனிக்கடவுள் தன்னொடும் சிறப்ப
ஒருவயிற்பிறந்த திருமலிசோதர,
இந்திர நின்னை ஈன்றவக்காலையில்,
புந்திமிக்குவந்த பொருவருந்தாயாம்
அதிதி யென்பவள் ஆதரத்தோடும்
உதவினள் நினக்கே ஓங்கலிற்பிறந்த
சோமபான மானமாம் துடிப்பருளமுதம்
மாமையும் உயிரும் மாளாவலியும்
நின்னுரம்பெற்று நிலைபெற அளித்தனள்
அன்னை யன்னவள் ஆதரத்தாலே;
அசனிகைப்பிடித்த இசை மலிவேந்த
நீபிறந்தன்று நெடுவரைக்குலங்கள்
மாபடைக்குலிசம் மதிவலத்தாலே
துவட்டிரியென்போன் சமைத்தது நூறு
மூட்டுள அசனி மொய்ம்புடைப்படையது
காட்டிய நின்கைக்காண்டலும் அஞ்சி
உள்ளுடைந்தனவால் விண்ணமும் மண்ணும்
துள்ளியுள்ளஞ் சித்துளங்கினவன்றே;
வானவர் தமக்கும் மண்ணவர்தமக்கும்
மானவேந்த மருவுறும் ஒப்பும்
உயர்வு மில்லாதே உதித்தனையன்றே;
பயிலுறும் பல்வகை உயிர்களுக்கெல்லாம்
கண்ணுநின்ற அண்ணல் வேந்த,
இறப்பும் இறுதியுமில்லா இந்திர,
வுறப்போடிருட்கு மாற்றரும்பகைவ,
எல்லையில் ஞானம் எய்திய முதல்வ,
அல்லலுற்றழுங்க அரிகளைச் சிதைப்போய்,
வீரமேவிய வெலற்கரும்வலியோய்,
சீரடிதேடிச் சேர்ந்திடும் எமக்குப்
பேரரணானோய், ஆரும் நின் சீரைப்
பாடுதும் அன்பாற் பழிச்சுமெம்பினுவல்
கூடி நின்னைக்கோல்வளை யொருத்தி
ஆருயிர் நாதனை அன்புறத்தழுவி
நலம் பெறல் போல நலம் பெறக்கடவ;
நீயே எமக்கு நிகரில் போஷகனும்
சாயாதெங்கள் சார்பினிற் பேசும்
நீதி குன்றா நேசனும் அளித்த
தந்தையும் தாயும் சகோதரன் தானும்
இந்த வெல்லாமும் இயைதர ஒருங்கே;
தந்தையின் நேயம் தழைத்திடும் தகைமலி
எந்தாய் யாங்கள் உன்னுடையுடைமை
நீயுமெமது நிகரனுமுடைமை;
தாயினிற்சிறந்த தண்ணருளாள,
யாமுனைத்துதிக்கும் எலவையில் நினது
தோமறும் அருளாற்றுகளற நோக்கி
செய்தீவினைதானென்றெனும் பலவெனும்
வெய்து கொல்லாமல் மிகப்பொறுத்தருள்க;
இன்றும் நாளையும் என்றும் காக்க;
வன்றிறல் அசுரர் வயப்படைகொண்டு
போர்க்கெழுந்தெம்மேற் போதுதல்காண்க;
கார்க்கடல் போலே கருதரும் அகியும்
விருத்திரனோடே மேவலர் குழுவும்
உருத்தெழுந்தெம்மேல் உறுவது காண்க;
விரைந்தெழுந்திடுக வெவ்விய போரில்
திறலொடுவலியைத் தீண்டியெழுப்பும்
பானமதனைப்பருகினை யெழுக;
ஊனமில்ரிபுக்கள் உதவிய செம்பரி
மானிரை பூட்டியவயங்கொளிக்கனக
மானமில்லாதமானமேற்கொள்க ;
மருத்துவர்புறஞ்சூழ்ந் தருத்தனர்போதம்
பகைவரையடக்கப்பரிந்தனைசெல்க ;
தருவர்நின்வலத்தைச்சாய்த்திடக்கருதல்
வீணேயண்ணவர் வெண்டிரை யெறியும்
புனர் செல்வத்தைப் பறித்திடமுயல்தல்
சினத்துநீ செலுத்தும் கனற்படையொலியால்
ஞாலமெல்லாம் நடுக்குறும் மாற்றரும்
படைபாய்ந்துடலம் கிழிதரப்பார்மேல
முடியுறவீழ்ந்தனன் அடையலனவன்புரம்
தகர்ந்தன அன்னான் தளங்கள்முறிந்தன
புகன்றிடும் அரண்கள் பொடிந்த அப்பொழுது
சிறையுறும்அரும்புனல் சிறைதவிர்ந்திடலால்
நெடுவரைஅருவி நிகர்த்திடப்பொழிய
நடமலிநதிகள் தண்புனல் பெருகி
அலையெறிந்திருகரை நுரையொடுததும்பி
கருங்கடலென்னும் கடிமனை நோக்கி
ஒருங்குறச்சென்றே ஓங்கிய அசனி
பிடித்தவன் வெற்றி பேசிடுமென்றே.

(இன்னம் வரும்.)

S. M.

## Some strange views of the Aryans and their religion.

## ஆரியர்களையும் ஆரியமதத்தையும் பற்றின சில விசித்திரமான கொள்கைகள்.

உலகத்தில் தற்புகழ்ச்சி யென்பது தள்ளக் கூடாத ஓர் துர்க்குணமாயிருக்கின்றது. ஒவ்

வொருவரும் தத்தம் சாதிமத ஆசாரங்களை நேரே சிறப்பித்துக் கொள்ளுவதன்றியும், இதர மதாசாரங்களை இழிவுபடுத்துதலாலும் தம்மை உயர்த்திக்கொள்ளப்பார்க்கின்றார்கள். இதற்கு திருஷ்டாந்தமாக இரண்டு விஷயங்களை இங்கு எடுத்துக் காட்டுவோம். சுதேசக்கிறிஸ்தவர்களில் ஒருவர், பிராமணர்கள் யூதர்களுக்கு மூலபுருஷனாகிய அப்பிரஹாமென்பவனின் சந்ததியாரென்றும், அந்த யூதர்கள் அசீரியா தேசத்தில் வெகுநாட் சிறைபட்டிருந்து விடுபட்டபின் அங்கு நின்றும் இந்நாட்டுக்குவந்து குடியேறினார்களென்றும், அவர்களே பிராமணர்களானார்களென்றும், வெகு விசித்திரமான யுத்திகள் கட்டித்தாபிக்கின்றனர். ஆயினும் அவ்வுத்திகளை ஆராய்ந்து நோக்குங்கால் முழுதும் அசந்தர்ப்பமாகவும் சிறுபிள்ளைத்தனமாகவும் காணப்படும். அவை யாவன ஒன்று! ஆபிரஹாம், பிராமணர் என்னும் இருமொழிகளும் ஓசையில் ஒன்றையொன்றொத்திருப்பதனால் பிராமணர்கள் ஆபிரஹாமின்சந்ததியாரே! அவர்கள் சிருஷ்டிகர்த்தாவாகக்கொண்டு வணங்கும் பிரமனென்னும் கடவுளும் பிராமணரால் தெய்வமாகக்கொள்ளப்பட்ட அவ்வாபிரகாமேயாம். இனிப்பிரமனும் ஆபிரஹாமும் ஒன்றென்று நிரூபித்தற்கெடுத்துக்காட்டும் காரணங்களும் மிகவும் வேடிக்கையானவை. ஆபிரகாமுக்குச் சாரா வென்று ஓர் மனையாளிருந்தாளாம்; பிரமனுக்கும் சாரதா வென்றோர் மனையாளுள்ளாளாம்! ஆபிரகாம் ஈசுவரார்ப்பிதமாக அனேகம் பலிகளைக்கொடுத்திருக்கின்றானாம்; பிரமனும் அநேகயாகங்களைச் செய்திருக்கின்றானாம்! ஆபிரகாம் அநேகம் பொய்மொழிகளைப் புகன்றிருக்கின்றானாம்; பிரமனும் அவ்வாறே ஒருகால் பொய்யுரைத்திருக்கின்றனனாம்! ஆபிரஹாம் யூதர்களுக்கு முதற்பிதாவாம்; பிரமனுக்கும் பிதாமகனென்று ஓர் பேருள்ளதாம்! ஆபிரகாமுக்குக் கேதரா வென்றோர் மனையாளிருந்தாளாம்; பிரமனுக்கும் சதுராளனென்றோர்பேருள்ளதாம்!! இக்காரணங்களால் ஆபிரகாமே பிரமன், பிரமனே ஆபிரகாமென்பதில் யாதும் சந்தேகமில்லையென்று வெகுகல்வித்தனமாகத் தமது கொள்கையை நாட்டுகின்றனர். இதை ஆலோசிக்கும்போது முற்காலத்தில் நரியொன்று மிருகேந்திரனாகிய சிங்கத்தை நோக்கி, 'நீயும் நானும் ஒன்றுதான்; உனக்கும் வாலுள்ளது, எனக்கும் வாலுள்ளது! நீ பெருங்காட்டில் வாழ்கின்றாய்; நானும் சுடுகாட்டில் வாழ்கின்றேன்; நீ ஆனையின் பிணத்தைத்தின்பாய், நானும் மானுடர் பிணத்தைத்தின்பேன்; உனக்கு அரியென்று ஓர் பேருள்ளது, எனக்கும் நரியென்று பேருள்ளது' என்று கூறியதாகச்சொல்லும் நியாயத்தையே ஒக்குமன்றி வேறில்லை.

அன்றியும் அசீரியா தேசத்திற் சிறைபட்டு விடுபட்ட யூதர்கள் அங்கு நின்று கி. மு. 700 வருடங்களுக்கு முன்னே மாத்திரமே பிரிந்து சென்று பிறநாடுகளிற் குடியேறினதாக அவர்களுடைய சரித்திரங்களே சொல்லுகின்றன. ஆதலின், ஆரியர்கள் அக்காலத்திலேயே பரதகண்டத்தில்வந்து குடியேறினதாகக் கொள்ளவேண்டும். இது மிகவும் அசம்பாவிதம் எனெனில், அவர்கள் குடியேறியகாலத்துக்கும் புத்தமதம் தோன்றிய காலத்துக்கும் மத்தியகாலம் 200, 2 0 வருடகாலம் தான் அக்கணக்குப்படி யேற்படும். இச்சொற்பகாலத்துக்குள்ளே ஆரியர் தமது முன்னோர்களாகிய யூதரது மதாசாரங்களை முற்றும் துறந்து, புதிதாக இந்திரன் முதலிய தெய்வங்களை யேற்படுத்தி வேதசாஸ்திரபுராண இதிஹாசங்களை இயற்றி ஜாதி பேதங்களையும் வகுத்து இவ்வளவு காரியங்களையும் செய்திருக்கவேண்டுமென்றாகிறது. அற்புதமான அரிய சத்திகளைப் பெற்ற மந்திரவாதி மாத்திரைக்கோலால் மாயவித்தைபாடுவதுபோல் இந்திர ஜாலம் செய்யினும் கூட இத்துணைப் பெரியகாரியங்கள் இவ்வளவு சீக்கிரமாக முடிக்கத்தக்கவையல்ல. ஆசார விபவகாரங்கள் எல்லாம் காலக்கிரமத்தில் அநேக நூற்றாண்டுகளுக்கிடையே படிப்படியாக மாறவேண்டுமேயொழிய இந்திரஜாலம்

போல மாற்றக்கூடியவையல்ல வென்பது யாவர்க்கும் தெரிந்தவிஷயமே. அதிலும் பிடித்ததைவிடாமல் முறட்டுத்தனமாய்ப்பற்றும் சுபாவமுள்ள இந்துக்களா இப்படி மாறுவார்கள்? ஒரு நாளுமில்லை. இவ்விதமான பிரத்தியக்ஷவிருத்தமான கொள்கைகளை முன்பின்னாலோசியாமல் கற்பித்துச் சொல்வதனால் யாருக்கு என்னபயன்? பிராமணர்கள் ஆபிரகாமின் சந்ததியாரென்று இவ்வாறு சிட்டைகட்டியசொல் சித்தாந்தப்படுத்தும் இவருடைய கருத்துயாதோ. இதனால் பிராமணர்களுக்கும் அவரது மதத்துக்கும் உயர்ச்சியுண்டுபண்ணவேண்டுமென்பதோ? அல்லது இகழ்ச்சி உண்டு பண்ணவேண்டுமென்பதோ? அல்லது மெய்மதத்தை விட்டு அறிவிழந்து நிலைதடுமாறிப் பொய்மதப்படுகுழியில் விழ்ந்து வருந்துகின்றார்க்கு அவரது அறியாமையையும் வரலாற்றையும் எடுத்துக்காட்டி முன்மதமாகிய சன்மதத்துக்குத் திருப்பவேண்டுமென்னும் ஆசையினாலோ? இன்னதென்றறிந்திலேம். இங்கிலீஷ் மஹாகவியாகிய போப் என்பவர் கூறியுள்ள நன்மதியை இவர் உணரார்போலும். "மதமூர்க்காளாய் அறிவுகெட்டு உன் மதம் பெரிது என்மதம் பெரிதென்று போராடிப்புலம்பித்திரிவார் திரிகுக. எவனொருவன் நல்லொழுக்கத்தில் நிற்கின்றானோ அவன் மதம் ஒருநாளும் பொய்யாகாது" என்று இவ்விஷயத்தை வற்புறுத்தியிருக்கின்றனர்.

நிற்க. நாம் முதலில் எடுத்துக் கூறிய உண்மையைவிளக்க எமது பார்வையில் வந்த இன்னொரு திருஷ்டாந்தமும் இங்கு விவரிப்போம். இதுவும் முன் திருஷ்டாந்தம் போன்றதே. 'எடுகேஷனல் ரிவ்யூ' வென்னும் ஓர் இங்கிலீஷ்பத்திரிகையில் சைவசித்தாந்தத்தைப் பற்றி எழுதும் ஒரு பண்டிதர், ஆரியர்களாகிய பிராமணர்கள் ஆகமங்களையும் சிவன் என்னும் தெய்வத்தையும் தமிழர்களிடத்துப் பெற்றுக் கொண்டனரென்றும், ஆகமமே உண்மை மதத்தைப் போதிப்பது வேதங்கள் பொய்மதத்தையே போதிப்பனவென்றும், 'வேதமென்பது பசு ஆகமம் அதன்பால்' அதாவது வேதங்களின் சாரமே ஆகமங்கள் என்று கொள்ளுவது பொய்க்கொள்கை யென்றும் பல யுக்திகளால் வெகுபண்டிதத்திறமைகாட்டித் தாபிக்கின்றனர். இஃது முன்னையதினும் விசித்திரமே! திருவாசகத்தில் 'மந்திர மலையான்' என்று ஓரிடத்திற் கூறியிருத்தலினால் சிவனுக்கு ஆதியில் வாசஸ்தானமாயிருந்தது மகேந்திரமென்னும் தென்னாட்டின் ஓர் பர்வதமென்றும், அம்மலையில் வாழ்ந்து வந்த சிவனைப் பிற்காலத்தில் ஆரியர்கள் தாம் ஆராதிக்க ஆரம்பித்தபின் வடதிசையில் இமயமலையின் கண்ணே கைலை மலைக்கு வேர்ப்பிடுங்கலாகப் பிடுங்கி வைத்தார்களென்றும், சிவனுக்கு தக்ஷிணாமூர்த்தி யென்றோர் பெயரிருத்தலின் அச்சிவன் தென்றிசைக்கடவுளே (அதாவது இபமனன்று! தமிழ் நாட்டுக்கடவுள்.) என்றும், அக்கடவுள் ஆகமங்களை முற்கூறிய மகேந்திரமலையிலிருந்து தமிழ்மொழியாலேயே உபதேசித்தனரென்றும், பின்பு அவ்வாகமங்கள் வடமொழியிற் பெயர்க்கப்பட்டனவெனவும் அவ்வாறு மொழி பெயர்க்கப்பட்டு வடமொழியில் உள்ள ஒன்றிரண்டு ஆகமங்கள் தவிர மற்றத் தமிழ் மொழியிலிருந்த ஆகமங்கள் யாவும் இறந்துபோயின வென்றும், அகத்தியமுனிவர் இச்சைவாகமத்தை வடநாட்டில் ஆரியர்களுக்குள்ளே பரவச்செய்தனரென்றும், இச்சைவ வணக்கம் முதல் முதல் மேற்றிசையில் அசீரியா தேசத்தினின்று தமிழர்கள் வந்து இந்நாட்டிற்குடியேறின காலத்தில் தம்முடன் கொண்டுவந்தனரென்றும் இன்னும் பலவும் வெகுசாதுர்யமாக வியவகரித்துச் சாதிக்கின்றனர்.

இன்னும் இவர் சொல்லும் விஷயங்களில் அநேகம் என்றும் கேளாப்புதுமையாக உள்ளன. ஆகமங்களிற் கூறப்பட்ட பதி, பசு, பாசம் என்னும் திரிபதார்த்தக்கொள்கையும் இத்தமிழர் தம்முன்னோர்களாகிய அசீரியரிடத்துப் பெற்றதாம். அதற்குச்சான்றாக விவிலிய நூலிற்

கூட (Bible) ஆதியில் சிருஷ்டிகாலத்தில் தேவனும் மனிதனும் பாம்பும் ஒருங்கே தோன்றினவாகக் கூறப்பட்டிருக்கின்றதென்றும், பாசத்தைப் பாம்பாகக்கற்பித்தல் நெடுநாளைவழக்கமென்றும், இராமாயணத்திற்கூட இந்திரசித்து இளையபெருமாளை நாகபாசத்தாற் கட்டினதாகக் கூறப்பட்டுள்ளதும் பாம்பும் பாசமும் ஒன்றேயென்னும் இவ்வுண்மையையே விளக்குகின்றதென்றும் எவ்வளவோ சாமர்த்தியமாய் விவகரிப்பதன்றி ஈசனுக்கு மாசுணத்தைப் பூஷணமாகவும் மாயனுக்குப் பாயலாகவும் கூறியிருப்பதும் இக்கொள்கையை அநுசரித்தே யென்றும் கூறுகின்றனர். இவர் சொல்லும் விஷயங்கள் இன்னம் பல உளவாயினும் இவையே இவரது கருத்தையுணர்த்துவதற்குப் போதுமானது. இவர் பிறப்பினல் தமிழர் என்பதற்குச் சந்தேகம் இல்லை. மதம் சைவசமயர் தானோவென்பது இதனல் உறுதியாக நிச்சயமாகவில்லை. சைவசித்தாந்தத்தில் அபிமானமுள்ளவரென்பது மாத்திரம் விளங்கும். ஆரியரினும் தமிழர்களே உயர்ந்தவர்கள், பிராமணர்களினும் சூத்திரரே தெரிந்தவர் என்று சித்தாந்தப்படுத்த உத்தேசித்தனர் போலுமின்றி உண்மையை உட்புகுந்து ஆராயவந்தவராகத் தோற்றவில்லை. இவர் சொல்லும் விஷயங்களில் முன்பின் ஒன்றுக்கொன்றொவ்வாமல் முரணுதலும், ஒன்றையொன்றுகப் பொருள் நோக்காது தமது இச்சைக்குத் தக்கபடித் திரித்துக்கொள்ளுதலும், இன்னம் பல குற்றங்களுமுள்ளன. அவற்றையெல்லாம் ஒவ்வொன்றாக எடுத்துரைப்பின் மிக விரியுமாதலின் ஒன்றிரண்டு விஷயங்களை மாத்திரம் இங்கு குறிப்பிடுவோம். ஓரிடத்தில் தமிழர்கள் இவ் விந்துதேச முழுதும் பரவியிருந்ததாகவும், இன்னேரிடத்தில் தென் திசையில் மாத்திரம் இருந்ததாகவும், ஓரிடத்தில் சைவாகமம் மந்திரமலையிற் றோன்றினதாகவும் மற்றோரிடத்தில் அவ்வாகம சித்தாந்தமாகிய பதிபசுபாசக்கொள்கை அசீரியா தேசத்திலிருந்து கொணர்ந்ததாகவும், ஓரிடத்தில் சிவன் தென்னுட்டவர் தெய்வமென்றும் இன்னேரிடத்தில் இப்பெயர் அசீரியரிடத்துப் பெறப்பட்டதென்றும் ஒன்றுக்கொன்று முரணக்கூறுகின்றனர். மாணிக்கவாசகர் மந்திரமலையானென்று சிவனைக் கூறியதனலே சிவனுக்குக் கைலாயம் முதலான பிறதானங்கள் இல்லாமல் அம்மந்திரமலையே முதற்றானமாக ஏற்பட்டதெவ்வாறோ? மொழிபெயர்க்கப்பட்ட வடமொழியாகமங்களை அவ்வளவு பத்திரமாகப் போற்றி வைத்திருப்ப ஈசன்பால் நேரே பெறப்பட்ட தென்மொழியாகமங்களை இழந்ததற்குக் காரணமென்னவோ? இவையொன்றும் விரிவாக விளக்கவில்லை. நிற்க, சிவனுக்கு தக்ஷிணமூர்த்தி யென்றோர் பேரிருத்தலாலே இவர் தமிழ் நாட்டுக் கடவுளென்று பொருள் பண்ணுவது எவ்வளவு விசித்திரம்! வடமொழி யுணர்ந்த பண்டிதர்களைக் கேட்டுணர்ந்தாரோ. அல்லது தாமாகவே அப்பொருள் செய்துகொண்டனரோ அறியேம். அம்மொழிக்கு உண்மையான பொருளை ஆராயுங்கால் (1) தென்முகமாக நோக்கியிருப்பவர் என்றும். சனகாதி யோகியர்களுக்கு உபதேசிக்க எழுந்தருளிய அவசரத்தில் தென்முகமாகவிருந்து உபதேசித்தனர். (2) அன்றியும் ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம் சத்தியோசாதம் என்னும் ஐந்து முகங்களில் பூசனைக்கருகமாகியது அகோரம் என்றும் அம்முகம் தெற்குநோக்கி யிருத்தலின் அம்முகத்தைச் சிறப்பித்து தக்ஷிணமூர்த்தி யென்று துதிக்கப்பட்டனரென்றும் பெரியோர் கூறுவர். (3) அன்றியும் தக்ஷிணம் என்றால் ஞானமென்றும், தக்ஷிணமூர்த்தி யென்றால் ஞானஸ்வரூபனுகிய ஈசுவரன் என்று பொருளென்றும் கூறுவர். இப்படியன்றி தக்ஷிணமூர்த்தி யென்பதற்குத் தென்திசைக் கடவுள் என்று பொருள் கொள்ளுதல் ஆபிரகாம் என்பதற்குப் பிரமனென்று பொருள் கொள்ளுதல்போலன்றி வேறில்லை. இனிப் பாசரஹிதனுகிய ஈசனுக்குப் பாசரூப

மாகிய பாம்பை ஆபரணமாகக் கற்பித்தது மிக விசித்திரமே! பாசத்தைத் தமக்குக் கீழ்ப்படுத்தி அதன் பற்றுத் தமக்குச் சாரா வண்ணத்தைக் குறிப்பிக்கவேண்டின், முயலகனைக் காற்கீழிட்டு மிதித்ததுபோலவும், காளிகனை முடிசிதைய ஏறிச்சதைத்ததுபோலவும் அல்லவோ இப்பாசமாகிய பாம்பையும் செய்தலாகச் சொல்லவேண்டும். அவ்வாறன்றி விரும்பிப்பூணும் ஆரகேயூராதி ஆபரணங்களாகவும் அறிதுயிலமரும் பாயலாகவும் கற்பித்திருப்பது அவ்வாறு கற்பித்தவர்களின் விவேகத்தை எள்ளளவேனும் எடுத்துக் காட்டுவதாகுமோ? வேதாந்த சித்தாந்தக் கொள்கைகளை மிகவும் விரிவாக எடுத்தோதிய மகா ஞானிகளுக்கு இவ்வற்ப விஷயம்கூடத் தெரியாதென்பது பிரத்தியக்ஷ விருத்த மாகுமன்றோ?

நிற்க. அகத்தியமா முனிவர் தென்றிசை நின்று வடதிசைச்சென்று தமிழர்க்குரிய சைவ மதத்தை ஆரியர்களுள்ளே பரவச்செய்தனரென்பதும் புதிய சித்தாந்தமாகவே யிருக்கின்றது. சாதாரணமாகப் புராணாதிகளிலே சொல்லியிருக்கும் விருத்தாந்தம் இதற்கு நேர் எதிரிடையாயுள்ளது. அவற்றுட்கூறியபடி அகத்திய முனிவர் இமயமலையில் பார்வதி கல்யாணத்தின் பொழுது சமஸ்த தேவதைகளும் அங்குவந்து கூடலின் பூமிபாரத்தால் வடபுறம்சாய்ந்த தென்றும் அச்சாய்வை நிமிர்த்திச் சரிப்படுத்தும் பொருட்டுச் சிவபெருமான் அகத்திய முனிவரைத் தென்றிசைக்கனுப்பினரென்றும் அவ்வாக்கினைப்படியே அவரும் சென்று பொதியமலையிற் றங்கினதாகவும் கூறப்பட்டுள்ளது. இப்புராணகதையை ஆராயுங்கால் ஒருகாலத்தில் தென்றிசையில் சாஸ்திரசம்பிரதாயங்கள் குன்றி நிலைகுலைந்திருந்தனவென்றும் அவற்றைப்பிரசுரிக்கும்படி உருவிற் சிறியவராயினும் அறிவில் அகண்டிதராகிய குறுமுனிவர் அனுப்பப்பட்டனரென்பதும் சைவமதமும் தமிழிலக்கணமும் அவராலே அங்கு பிரசுரிக்கப்பட்டன வென்பதும் எளிதிற் பெறப்படும். காளிபூசனை வெறியாடல் முதலிய வழக்கங்கள் அநாரியர்களாகிய தமிழரிடத்திருந்து ஆரியர்களுக்குப் போந்தனவே யன்றி சைவசித்தாந்தத்தையும் சைவவணக்கத்தையும் பெற்றுக்கொண்டனரென்பது முற்றும் ஒவ்வாது.

இனி இவ்விஷயமாகச் சொல்லவேண்டுவன அநேகம் இருப்பினும் அதிகவிரிவஞ்சி விடுத்தனம்.

S. M. A.

---

## SWIMMING.

## நீந்தப்பழகுதல்.

இக்காலத்தில் பயின்றுவரும் பற்பல விளையாட்டுகளிலும் நீந்தப்பழகுதல் மிகவும் உபயோகமானது. இந்தவித்தையைச் சிறிது காலம் விடாமல் சிரமப்பட்டால் கற்றுவிடலாம். இதை இங்கிலாந்து தேசத்தில் பாடசாலைகளில் எழுதப்படிக்கக் கற்பித்தல் போலவே கற்பித்து வருகிறார்கள். நமது தேசத்தில் இதைப் பாடசாலைகளில் கற்பிக்காவிடினும் கிராமாந்தரங்களில் பெரும்பான்மையோருக்கும் பட்டணவாசங்களில் பலருக்கும் இவ்வித்தை ஒருவாறு வரும். ஆறு ஏரி குளங்கள் மடுக்களில் ஸ்நானம் செய்யும் வழக்கமுள்ள ஊர்களில் உள்ள பிள்ளைகளுக்கு இது அவசியம் தெரிந்தே யிருத்தல்வேண்டும். இவ்வித்தையை எல்லோரும் கற்றுக்கொள்ளும் பக்ஷத்தில் அநேக ஜலகண்டத்துக்கும் துர்மரணத்துக்கும் தப்பிப் பிழைக்கலாகும்.

நீந்திவிளையாடுதல் உடம்புக்கு ஆரோக்கியத்தையும் பலத்தையும் கொடுக்கும். தாபத்தாலுண்டான பரிசிரமமும் தீரும். இதைப்போல தேகத்தின் ஒவ்வொரு உறுப்புக்கும் முயற்சியைக் கொடுக்கும் விளையாட்டு வேறில்லை. பிரதிதினமும் காலையில் ஆற்றிலாவது குளத்திலாவது நீந்த வழக்கம் பண்ணிக்

கொள்ளுதல் உடம்புக்கு மிகவும் நல்லது. நாள் தப்பாமல் ஸ்நானம் செய்பவர்களுக்கு நோய்நொடி வாரா. வாடையிலும் கோடையிலும் எப்போதும் இதை அநுஷ்டிக்கலாம். எவ்வளவு குளிர்ந்த நாளிற்கூட ஜலத்தில் இறங்கும்வரையில் கஷ்டமேயன்றி இறங்கி முழுகிவிட்டால் பின்பு இதமாகவேயிருக்கும். ஆனால் ஈரல்வலி முதலிய சிலவியாதிகள் உள்ளபேர்கள் குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்தால் மிகுந்த கெடுதியுண்டாகும். நாள் தோறும் முழுகி ஸ்நானம்செய்வதினால் தேகம் சுத்தமாயும் மயிர்க்கால்களின் வழியேயுள்ள துவாரங்கள் அடைபடாமலும் இருக்கும். அதனால் உடம்புக்கு ஆரோக்கியமுண்டாகும்.

புருடரிலும் பெண்களிலும் அநேகர் தங்களுக்குப் பால்யத்தில் போதுமான தேகமுயற்சியில்லாமையால், பிற்காலத்தில் வருந்துகிறார்கள். மனத்துக்குத் தெளிவும் விரைவும் எழுச்சியும் உண்டாகவேண்டுமாயின் இந்த விளையாட்டைப்போற் பயனுள்ளது ஒன்றுமில்லை. இதனால் தேகமுயற்சியும் பரிசுத்தமும் நல்லபிரயோசனமும் ஆகிய மூன்றும் ஒருங்கேயுண்டாகின்றன.

நீந்தும் வித்தையில் மிகவும் பேர்போனவர் 'காப்டன் வெப்' என்பவர். இவர் 1875-ம் வருஷத்தில் இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் இடையில் உள்ள சமுத்திரக்கழியை நீந்திக் கடந்தனர். இவர் அக்காலையில் இருபத்தொன்றே முக்கால்மணிநேரம் ஜலத்திலிருந்து முப்பத்தொன்பதரை மயில் தூரம் நீந்தியிருக்கின்றனர். இவர் மதுவகைகள் ஒன்றும் விரலால் தொடுவதில்லை. பாவம்! இவர் 1883-ம் வருஷத்தில் அமெரிகாதேசத்திலுள்ள 'நியாகாரா' (Niagara) என்னும் பயங்கரமான நதிவீழ்ச்சியில் முரட்டுத்தனமாக நீந்தித் தமது பிராணனை இழந்தனர். இந்த 'நியாகாரா' என்பது இரண்டு ஏரிக்கு நடுவேயுள்ள பெரியதோர் நதி. இது உயரத்திலிருந்து அப்படியே செங்குத்தாக வீழ்கின்றது. இது உலகிலுள்ள அருவி வீழ்ச்சிகள் எல்லாவற்றினும் பெரிது.

---

## சுகுணசுந்தரம்.

### II.

அவ்வாறு சென்ற அரசகுமாரன், மந்திரி குமாரனைப்பார்த்து தங்களுக்குள் பூங்காவின் சிறப்பைபற்றி சொல்லுவதாவது:—'சுகுண! இப்பூங்காவின் அமைப்பைப்பார்த்து வியக்கின்றேன். இவ்வாறு எங்கும் நாம் கண்டதில்லை யல்லவா?'

சுகுணன்.—'மித்திர! பத்தி பத்தியா யிப்பூங்காவைச்சுற்றிலு மிருக்கும் கமுகமரங்களின் விந்தையைக் கண்டாயோ? இவ்வனத்தின் எல்லைச் சுவர்போல் காணப்படுகின்றது.'

சுந்தரன்.—சுகுணசீலா! பார், இப்பொய்கையினமைப்பு வெகு விசித்திரமாயிருக்கின்றது.

சுகு.—இராஜநந்தன! ஆம், இதைப்போல் நாமிதுவரையி லெங்கும் கண்டதில்லை. தெய்வநிர்மாணமாயிருக்கும் மானஸஸரோவரத்திற் கொப்பிடலாம். இதிலனேக விதமான இராஜஹம்ஸங்களும், சக்கிரவாகங்களும், மலர்ந்து சிவந்திருக்கும் அழகிய தாமரைப் புஷ்பங்களிலுள்ள தேனைப்பருகும் கருத்து முதித்த பிரமரங்களும் வசிக்கின்றனவே.

சுந்.—அமைச்ச! இப்பொய்கையைச்சுற்றி வரிசையாய் செவ்வலரி புஷ்பித்திருக்கும் விந்தையைப்பார். அதற்கு வெளியில் பலவித வண்ணமுடைய ரோஜாவும் புஷ்பித்திருக்கின்றனவே.

சுகு.—சுகுமாரவதன! அவ்வாறு புஷ்பித்திருக்கும் செவ்வலரிமலர்களும் ரோஜாமலர்களு மிருக்கும் காட்சியானது கண்ணிற்கு ரம்மியமான கிளைவிளக்குகளோ என்று சொல்லும்படிக்கிருக்கின்றன.

சுந்.—இன்னுயிர்த்தோழ! பார்த்தாயோ இங்குறு மழகிய மெல்லிய முல்லைக்கொடியை?

சுகு.—சுந்தராகார! அதன் வணக்கத்தினால் ஓர் பெண்ணுக் கொப்பிடலாமல்லவா?

சுந்.—மதிவள்ளலே! இதோ பார் (சுட்டிக்காட்டிக்கொண்டு) இச்சுந்தரமான வழகிய மல்லிகைக் கொடியானது ஓர் மாமரத்தைத் தழுவி நிற்கின்றது.

சுகு.—சிநேக! அவற்றை எவீற்றிற் கொப்பிடலாம்?

சுந்.—சுகுண! ஓர் வணங்கிய சுந்தரத்திருமேனி யாளாகிய சுந்தரி தன் மனதிற்குகந்த நாயகனை ஆலிங்கனஞ் செய்துக்கொண்டிருப்பது போல் இருக்கின்றது.

சுத.—நண்ப! இதோ பார்! செவ்வசோக மரத்தின் அழகிய தோற்றம் வியக்கத்தக்கதா யிருக்கிறது.

சுந்.—மித்திர ரத்தினமே! இது நன்ருய்த் தளிர்த்துப் பூத்திருப்பதைப்பார்த்தால் யாரேனும் நற்பெண்டிர் தோஹதங் கொடுத்திருக்கவேண்டும்?

சுத.—சுந்தரவள்ளலே! தோஹதமென்ருலென்னை?

சுந்.—சுகுணசிரேஷ்ட! நீயேதானன்ரே எனக்குரைத்தனை. உத்தமிகளின் பாதத்தினுல் உதைத்தல் என.

சுத.—ஆம்! எனக்கு மிப்போதுதான் ஞாபகம் வந்தது. மகிழம், ஏழிலைம்பாலை, பாதிரி, முல்லைக்கொடி, புன்னை, குரா, அசோகு, குருக்கத்தி, மரா, சண்பகம் ஆகிய இவைகள் முறையே மகளிர்கள், சுவைக்க, நட்புற, நிந்திக்க, நகைக்க ஆட, தழுவ, அதாவது அணைக்க, உதைக்க, பாட, பார்க்க, நிழல்பட தளிர்த்து புஷ்பிக்கு மியல்பினை யுடையனவாம். இவைகளு மவ்வண்ணமே சடுதியில் மகளீர் விளையாட்டினுல் தளிர்த்து புஷ்பித்திருக்கின்றன பார்!

சுந்.—தோகத முதலிய விளையாட்டுகளைச் செய்ய இப்பூஞ்சோலைக்கு வரும் புண்ணியவதிகளாகிய மகளீர் யாவரோ?

சுத.—சுகுணகெம்பீர! இது புண்ணிய பூமியானது பற்றி இங்கு தெய்வப்பெண்கள் சஞ்சரிப்பார்களென நினைக்கின்றேன். இவ்வுபவனமானது ஓர் இராஜன் தன தின்பத்தைக் கருதியே யமைத்திருப்பதாகப் காணப்படுகின்றது.

சுந்.—அற்புதாகார! அவ்வண்ணமே யாகும். என் வலது கண்ணும் புயமும் துடிக்கின்றனவே! ஒரு கட்டழகியின் கூட்டுறவு எனக்கிப்போது வாய்க்கும் போலும்.

சுத.—சுசிலதனய! பார் இவ்வனதேவதையே அதிதிகளாகிய நம்மை யுபசரித்தழைக்கின்ருள். இதுவும் சுபத்தைத் தெரிவிக்கும் நற்சகுனமாம்.

சுந்.—தோழ! எவ்வண்ணம் நம்மை யுபசரிக்கின்றனள்.

சுத.—பார்த்திவ! இங்கிருக்கு மல்லிகை, முல்லை, இருவாக்ஷி, முதலிய செடிகள் தன்னிளங் கொடிகளாகிய கரங்களால் நம்மைச்சுட்டி யழைக்கின்றன. மலையமாருதமென்று சொல்லு மிளந்தென்றல் வீசுவதினுல் இங்கிருக்கும், மா, பலா, கொய்யா, அசோகு, வகுளம், வேங்கை, முதலான மரங்களின் இளந்தளிர்க ளசைகின்றன. அதனுலே நாம் வெகு தூரத்திலிருந்து வேசாரிக்களைத்து வந்திருக்குமேமென்று இவ்வனதேவதையே தன் மெல்லியகரங்களை நீட்டி விசிறிகொண்டு விசுறுவதுபோல மனோக்யமாயிருக்கின்றது. இம்மரங்களிலுள்ள, மா, பலா, கொய்யா, மாதுளை, கொழிஞ்சி முதலிய கனிகள் நிறைந்திருக்கின்றனவே அவைகளைத்தின்று பசியாறுங்கள் என்று சொல்லி கிளைகளாகிய கைகளில் ஏந்தி நிற்பதைப்போலும், மயில்கள் தோகை விரித்தாடுகின்றன. ப்ரமரங்கள் தேனையுண்டு ரீங்காரஞ்செய்கின்றன. இன்னுஞ் சுகங்கள், கோகிலங்கள், முதலானபறவைகள் இனிமையாய்க் கூவுகின்றன, பாடுகின்றன, கூத்தாடுகின்றன. இவைகள் நம்மை நிருத்த, சீத, வாத்தியங்களினுலே சந்தோஷப்படுத்துகின்ற நடனசபைபோலு மிருக்கின்றன.

சுந்.—சுகுண! உன்னறிவின் நுட்பத்தை என்னென்று சொல்லுவேன்! நம்மை யதிதிகளாகவும், இவ்வ[illegible]ானத்தையும், அதிலுள்ள பல [illegible], கொடிகள், செடிகளையும், ஓர் வனதேவதை நம்மை யுபசரிப்பதாகவும் உவமித்துக் கூறினுய். அதனுலன்ரே உனக்கு 'சுகுணன்' என்னும் நாமம் பொருந்துகின்றது?

சுத.—'சுந்தரான்ன! இதோ பார்த்தனையா பாரிஜாதம், சுற்றிலும் பயிரிடப்பட்டு நடுவில் விசாலமான மேடை போடப்பட்டிருக்கின்றது. இவ்விருக்ஷங்கள் தேவராஜாவினுபவனத்திலன்றி வேறெங்குங் கிடையா. இவைகள் கொஞ்சமுயர்ந்து இளந்தழைகளா லாகாயத்தை மறைத்தும், மேடையெல்லாம் புஷ்பமயமாய் உதிர்ந்தும் கிடப்பதைப் பார்த்தால் ஏதோ ஓரழகிய புஷ்பசயனமாகத் தோற்றுகின்றது. இவைகளைச்சுற்றி சம்பங்கிக்கொடிகள் அடர்த்தியாயடர்ந்து பச்சைப் பசேலென்று அவைகள் புஷ்பித்திருக்கும் விந்தையையும் பார்த்

தால் காமிகள்ரமிக்கும் விசித்திரமாயுள்ள கொடிவீடுபோல காணப்படுகின்றது.

**சுந்.**—'என் பிராணனே யுருவாய்க்கொண்ட நேச! மறுபடி என் வலது தோளும் கண்ணும் துடிக்கின்றதே, இக் கொடிபோன்ற ஓர் அணங்கரசு என்னைக் கூடுவாளோ என ஐயுறுகின்றேன்.

**சுகு.**—'உன தெண்ணம் நிறைவேறு மென்பதில் தடையாது பார்! ஏதோ பெண்களினினிய குரல் கேட்கின்றது'.

**சுந்.**—'இது எந்த நகரத்தைச்சேர்ந்த உபவனமோ. இந்நகரத்தரசன் புதல்விகளோ அல்லது வேறெந்த கந்தர்வமாதர்களோ இன்பமாய் வார்த்தையாடிக்கொண்டு அங்கனம் சஞ்சரிக்கின்றவர்கள்.

**சுகு.**—'அகண்ட பூப! பர்வதங்களுக்குள் சிரேஷ்டமானது இந்த ஹேமகூடம். இதை யணித்தாயுள்ளது ஹேமாபுரி. இதை சாருதத்தன் என்றொரு கந்தர்வன் அரசாண்டு வருகிறான். நமது திக்விஜயகாலத்தில் இவன் நம்மை வணங்கி காணிக்கைகளைச் செலுத்தினானன்றோ! அந்த ஹேமாபுரிதான் இந்நகரம். இச்சிங்காரத் தோட்டமுமதைச்சேர்ந்த தென்றே எண்ணுகிறேன். வரவர பெண்களின் மொழி செவிக்கினிப்பைத் தருகின்றது.'

**சுந்.**—'நாமும் போவோம் வா. அத்திக்கைநோக்கி.'

**சுகு.**—'இதோ ஓர் மண்டபம் தெரிகின்றதே, இது எவ்வளவு விசித்திரமாக யிருக்கின்றது. இதைச்சுற்றி கதலி விருக்ஷங்களும் இடையில் சிற்சில ரோஜாவும் இன்னும் பூஜார்ஹமான சில புஷ்பச்செடிகளும் பயிரிடப்பட்டு சில்லென்று குளிர்ச்சியைத் தருகின்றது.'

**சுந்.**—அதோ பார் சுகுண! (சுட்டிக் காட்டிக்கொண்டு) இம்மண்டபத் தருகில் மூன்று பெண்கள் ஓர் மகிழ மரத்தடியில் உதிர்ந்து கிடக்கும் குஸுமங்களைப் பொறுக்கிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களில் ஓர் ஸ்திரீரத்னம்,

"பூவும்பழுத்த செழுந்திங்கனியும் பொழியமுத
மேவுங்குடங்களிரண்டுடனே யிருமீனுங்கொண்டு
சேவுந்தழகர் திருவெங்கைவாணர் சிலம்பின்மலர்
தூவும்பொழிலில் எதிர்ப்பட்டதாலொரு தூமணியே."

என்றபடி, தாமரை முதலிய புஷ்பங்களையும், கொவ்வைக்கனியையும், அமிர்த நிறைந்த இரண்டு குடங்களையும், இரண்டு மத்சியங்களையும் தாங்கிக்கொண்டு ஒரு ரத்னமானது ஓர் பூஞ்சோலையில் தோன்றுகின்றதே எனக் கூரியவாறு காணப்படுகின்றது. நாம் பேசாமல் மௌனமா யவர்களுக்குத் தெரியாமல் அங்கு மெள்ளச்சென்று இம் மண்டபத்தின் மதிலோரமாய் மறைந்து அவர்கள் மொழிவதைக் கேட்போம்." என்று மறைந்திருந்தனர்.

இவர்களிவ்வண்ணமிருக்க, அங்குள்ள மூன்று பெண்களி லொருத்தி மற்றொருத்தியோடு, "அடி தோழி! இன்று ஏதோ நந்தலைவியின் முகம்வாடி ஒளிமழுங்கிய சந்திரனைப்போல் காணப்படுகின்றதே! ஏன்!" என, மற்றொருத்தி, அடி மரகதம்! அவள் தேகம்கூட மெலிந்து இளைப்புடன் ஏதோ தன் மனதில் கொண்ட எண்ணம் முற்றுப்பெறாமல் அதை வெளியிடாது கலங்குகின்றாள்."

**மரகதம்.**—'அடி கனகம்! அதற்கு காரணம் நீ யறியாயோ, சொல்லுகிறேன் கேள். அவள் பிதாவான சாருதத்த மகாராஜா ஸ்வயம்வரம் நாட்டியிருப்பதுதான்.'

**சுகு.**—'சுந்தரனே! (என்று மெதுவாய்) பார்த்தனையா தோழ! அங்குள்ள மூவர்களில் இவள் (சுட்டியவளைக் காண்பிவித்துக்கொண்டு) சாருதத்த மகாராஜன் புத்திரி; மற்றைய இருவர்களும் அவளுடைய தோழியர்கள் என்பது அவர்களுடைய மொழிகளே தெரிவிக்கின்றன" என,

**சுந்.**—'ஆம்! இன்னும் கேட்போம்'.

**மர.**—'அதனால் தன தெண்ணமுற்றுப் பெறாதென்னும் கவலைதான்.'

**கனகம்.**—'அம்மாள் கிருபை பூர்ணமாயுள்ள நந்தோழிக்கு இஷ்டம் பூர்த்தியாகாமல் போகாது'.

"யார்க்கும் முன்னவனே முன்னின்றால் முடியாத
பொருளுளதோ."

என்று சொல்லப்பட்டிருக்கின்றதே.

**மர.**—அடி தெய்வமென்று நம்பினவர்களுக்குக் குறைவு ஒருக்காலும் வாராது. அடி! என்னின்னுயிர்க் கண்மணியாகிய சுலோசனா தேவியே! உனது மனக்குறைதானென்னை?

**சுலோசனம்.**—தோழிகாள்! என் முகவாட்டத்தைப்பற்றி நீங்கள் கவலைப்படுவதில் பயனென்னை? ஆயினுஞ் சொல்லுகிறேன் கேளுங்

கள் :—உலகத்தில் மிகச் செழிப்பும், குளிர்ச்சியும் அனேக விதமான அழகிய குன்றுகளும், ஹம்ஸங்கள் வசிக்கும் நேர்த்தியான தடாகங்களும், மகரிஷிகள் வசிக்கு மாசிரமங்களும், யக்ஷர்கள், கின்னரர்கள், கிம்புருஷர்கள், கந்தர்வர்கள், இமரர்கள் முதலானவர்களால் விரும்பத்தக்க விந்த ஹேமாசலத்தை யடுத்ததுமான ஹேமாபுரத்தை அரசாட்சி புரியும் சாருதத்த மகாராஜாவுக்கு அருமைப் புத்திரியாகப் பிறந்து மிகவும் செல்வமாய் நான்வளர்ந்தும் என் கருத்தையும் நான் கொண்ட வெண்ணத்தையும் அறியாது என் பிதா ஸ்வயம்வரம் நாட்டியிருப்பதை நினைக்க என் மனம் மிகவும் வருந்துகின்றதே! என்ன செய்வேன்; (என்று பெருமூச்சுவிட்டாள்).

சுந்.—'நண்ப! இத்தலைவியின் மதுரமான மெல்லிய வசனங்களால் நீ, மேலேகூறிய சாருதத்த மகாராஜன் உபவனமென்பதும், இவள் அவ்வரசனுடைய குமாரத்தி என்பதும் நன்கு விளங்குகின்றது. இவளை சுலோசனமென்றழைப்பதும் தகும். இவளது நேத்திரங்களும் அப்படியே மனோக்யமாக இருக்கின்றன.

கன.—'நீ சொன்னது போலவே! மரகதம்! அவள் முக வாட்டத்துக்குக் காரணம் ஸ்வயம்வரம் நாட்டியிருப்பதே எனத் தெரிவிக்கின்றனள் பார்த்தனையா? ஸ்வயம்வரமென்றால் அனேக இராஜகுமாரர்களுக்குள் தனக்கிஷ்டமானவனைத்தேடி மாலையிடுவதுதானே. அதில் குறையென்ன நேரிடும்?

சுலோ.—'தோழி மரகதம்! கனகம் எப்போதும் அசட்டுவார்த்தை பேசுகின்றாள். பலதடவைகளில் எனது குறைகளை என்னின்னுயிர்க் கண்மணிகளான உங்களிடம் சொல்லியிருக்கின்றேனே! அப்படி யிருந்தும் அவள் தெரியாதவள்போல் நடித்து என்னைத் தூண்டுதலால் பின்னு மென்மனக் கொதிப்பு அதிகப்படுகின்றதே.'

மர.—அடி தோழி! அவள் சுபாவம் தெரிந்ததுதானே. அதற்குநீ யேன் வீணில் கவலைப்படுகின்றாய்?

சுலோ.—இல்லையடி யில்லை, அவள் மிக்கச் செருக்குற்றிருக்கின்றாள். தான் தன்னிஷ்டப்படி தன் அத்தை மகனான சுமுகன் (நம்ம இராஜனிரண்டாவது மந்திரி) இருக்கின்றானன்றோ அவரை மணந்து சுகித்திருக்கும் கெர்வமன்றோ? இப்படிப் பரிகாஸஞ்செய்யச் சொல்லுகின்றது.

மர.—அடி சுலோசனே! நீ சொல்லுவது கூடச் சரியாய்த் தோற்றவில்லை யெனக்கு. நேற்றிரவு ரதிகேளியில் தன் நாயகனுடன் காலம்போக்கி அவளுக் குறக்கமில்லை. அந்த மயக்கத்தினாலன்றோ இப்படி வாய்க்குவந்தவாறு பிதற்றுகின்றதாய்க் காணப்படுகின்றது.

கன.—(மரகதத்தைப் பார்த்து சற்று முகங்கடுத்து) அடி உனக்கு வேறுவேலையில்லை. அது உனதெண்ணம். எல்லாரையும் அப்படிநினைக்கிறாய் போலும். தோழி சுலோசனே! நான் வாஸ்தவமாய் நினைத்துச்சொன்னதைச் சொல்லுகின்றேன் கேள்: நீ கருதியவண்ணம் தேவியனுக்கிரஹத்தால் இச் சிங்காரவனத்தில் சுந்தரமான இராஜகுமாரன் நாயகனாக வாராமலிருந்தாலும் சுவயம்வர மண்டபத்திலாவது வந்து வெளிப்படக் கூடுமென்று நினைத்துச்சொன்னதேயன்றி வேறில்லை. ஏண்டி என் கண்மணி! இராஜதனயர்களில் ஒருவனல்லாது வேறுயார் உன் மனதில் குடிகொண்டிருக்கின்றான். அவன் வாரானோ சுவயம்வரத்திற்கு?

சுலோ.—தோழிகாள்! ஏற்கனவே யான், என் காதலைத் தணிப்பவன் அம்மாளனுக்கிரஹப்படி இங்கு இன்னும் காணக்கிடைக்கவில்லையே! அப்படிக்காணாதவேறு யாரையும் எங்கும் கண்ணாரக் கூடப்பாரேன் என்று என மனஉறுதியைச் சொல்லியிருக்கின்றேன் அன்றோ! இன்னொருமுறை உங்களுக்குத் தெரியச் சொல்லுகின்றேன் கேண்மின்: கொஞ்சநாளைக்குமுன் என் தந்தை என் விவாஹத்தைப்பற்றி என் அன்னையான தேவி மனோரமையின் முன்னிலையில் என்னைக்கேட்டகாலத்தில் யான், என்னைக் கவியில் வெல்லும் திறமைவாய்த்தவனும், தீரனும், அழகனுமானவன் எவனோ அவனை யல்லாமல் மற்றெவனுக்கும் மாலையிடேன் என்று சொல்லியிருந்தும் என்னை யறியாது ஸ்வயம்வரம் நாட்டியிருக்கின்றாரன்றோ! ஸ்வயம்வர மண்டபத்தில் ஏககாலத்தில் இராஜநந்தனர்கள் கூட்டங்கூட்டமாய்த் திரண்டுவந்து கூடியிருப்பார்கள் அல்லவா? அவர்களில் ஒவ்வொரு

வரும் "என்னைத்தான் மாலையிடுவேள் என்றிமைகொட்டாநோக்கத்துடன் ஆஸனங்களில் வீற்றிருப்பார்களே! அவர்களில் தேவியனுக்கிரஹத்தால் வந்தவன் யாவனென்று நான் அறியக்கூடும்? ஒருவேளை யறிந்தாலும், தேவி பூஞ்சோலையில் எனக்கிசைந்த நாயகன் வெளிப்படுவான் என்றனுக் கிரஹித்தது தவறுகின்றது. நான் கோரியது மவ்வண்ணமேயாகையால் என் விருதத்திற்கு பங்கமும் வருகின்றது. என் செய்வேன், அடி தோழிகாள் தினந்தோறும் யான் இவ்வுபவனத்தில் எனக்கென்றியற்றிய இவ்வழகிய தடாகத்தில் நீராடி சிறந்த இம்மண்டபத்தில் என தெண்ணங்களிக்குமாறு ஓர் சத்புருஷனை நாயகனாக அடையக்கருதி லோகமாதாவும் பராசக்தியுமான அம்பாளைக்குறித்து ஜபஞ்செய்து நிஷ்டையிலமர்ந்து மற்றக் காலங்களில் அதிக வினோதமாய்க்கட்டிய என் கன்னியாமாடத்தில் நீதிக்கிரந்தங்களைப் பார்த்தாராய்ந்தும் வருங்கால் ஒரு நாள் ஜகத்ரக்ஷகியான அம்பாள் பிரத்தியக்ஷமாகி 'குழந்தாய், மனதில் கவலையுறற்க, இப்பூங்காவில் திவ்விய சுந்தர தேஜோவானும் உன்னைக் களிக்கச்செய்பவனுமான ஓர் இராஜகுமாரனைக் கண்ணுறுவாய், அவனே யுன் கணவன்' என்றுசொல்லி மறைந்தாளன்றோ! அதுமுதற்கொண்டு சுந்தராகாரமான ஓர் கட்டழகன் என் மனதில் குடிகொண்டு வருந்தச்செய்கிறானன்றி எதிரினின்றும் வந்திலன், என்செய்வேன் என்றுதான் தவிக்கின்றேன்; அன்றியும் ஸ்வயம்வர மண்டபத்திற்கு யான் செல்வதினால்,

"கண்டுகேட்டுண்டு பார்த்துற்றறியுமைம்புலனும்
ஒண்டொடிக்கண்ணேயுள."

என்றிருத்தலால், அரசர்களுடைய கண்களுக்கு நான் புலப்பட்டு தோஷத்தை யடைந்தவளாய் விடுவேன். அவ்வண்ணமாகாமல் எனது நாயகனனுபவிக்கக்கூடிய பொருளாகவே யிருத்தல்வேண்டுமென்பதே என தெண்ணம். தமயந்தி தேவிகூட, நளனது ரூபலாவண்யங்களை அன்னப்பறவையினாற் கேட்டு, அவனை முதலில் பாராதவளாயிருந்தும், இந்திரன், அக்கி, வருணன், யமன் இவர்களால் தூதாக அனுப்பப்பட்டுவந்த நளனைக் குறிப்பாலறிந்து 'காதலனே என்னை யிவ்வாறு பரிக்ஷிக்கலாகாது, உயிரை மாய்ப்பேன். ஸ்திரீஹத்தி உம்மைத்தான் சேரும். இக்ஷணமே என்னை மாரனிடமிருந்து காக்கவேண்டும்,' என்றவள் மனஉறுதியைக்கண்ட அவன் வந்தகாரியம் பலியாதுதிரும்ப, அமரர் நால்வரு மிதையறிந்து தாங்களும் நள ரூபமாகவே சுயம்வர மண்டபத்தில் தன்னை ஏமாற்றிய காலையில், நளனை காணுமற்றியங்கி, ஐந்து நள ரூபங்களைக்கண்டு மயங்கி, தன் குலதெய்வத்தை வணங்கித்தொழுது மனதில் தியானித்துக்கொண்டு பார்க்கையில், தனது பக்தியின் மகிமையால் அமரர் நால்வருமணிந்த மாலைகள் வாடாமலும், கண்ணிமையாமலும், கால் நிலந்தோயாமலுமிருத்தலால் அவர்களை நீக்கி நளனையே நளனாகக் கருதி மாலையிட்டனள். அமரர்கள் வெட்கிச்சென்றார்கள். தோழிகாள்!

"தெய்வந்தொழாள் கொழுநற்றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யுமழை."

எனப் பெருநாவலரும் கற்புடைய மாதர்களின் மகிமையை வியந்திருக்கின்றனர். மனம், வாக்கு, காயம், என்று சொல்லப்பட்ட திரிகரணங்களில் மனதினால் தன் பர்த்தாவல்லாத இதர புருஷனை ஸ்மரித்தாலுஞ் சரி, அல்லது வாக்கினாலுச்சரித்தாலுஞ் சரி, அல்லது காயத்தினால் ஸ்பரிசிக்க நேர்ந்தாலுஞ் சரி, கற்பழிந்து ரௌரவாதி நரகில் வீழ்ந்தழிவார்கள் பெண்கள். அப்படியிருக்க, அம்பாள் அனுக்கிரஹமெந்த நிமிஷமுதல் பெற்றேனோ அந்த நிமிஷமுதல் ஊண், உடை உறக்கமில்லாது சுந்தராகாரமான ஓர் இராஜ தனயனை யெப்போது காண்பேன் என்று தான் வருந்துகின்றேன். அச்சுந்தரனைக் காணும்வரையில் யான் இச்சுயம்வரத்திற்குட்பட்டு வருவேனேல் நரகில் வீழ்ந்துமாய்வேன்'.

மா.—'இது விஷயமாய் நாம் ஏன் கவலைப்படவேண்டும். உனக்கிஷ்ட நாயகனை வருவிப்பது அம்பாளைப் பொறுத்த பாரமன்றோ!'

சுலோ.—இப்பொழுது இடது கண்ணு மிடது தோளும் துடிக்கின்றதே! இதற்குக் காரணம் யாதோ?

கனகம்.—'இது மங்களகரமான சகுனமாகத் தோன்றுவதால் உன திஷ்ட நாயகன் விரைவில் வெளிப்படும்சமயம் நேரிடும்போலும்.'

சுந்.—அரசபுத்திர! இப் பெண்ணரசிக்குச் சிறந்த நாயகன் நீ என்பது எனக்குத் தெளிவாய் விளங்குகின்றது. எதனாலெனி னிப்பெண்கள்

நாயகத்துக்கு தேவி கடாட்சித்திருப்பதாலும், நீ பரமேசுவரனனுக்கிரஹத்தால் அவதரித்த வனுயிருத்தலாலும் உங்களுடைய ஊழானது உங்களிருவரையும் இப் பூஞ்சோலையில் கொண்டுவந்து சேர்த்திருப்பதாலும் உங்களுக் கழகும் பருவமு மொத்திருப்பதாலுமே விளங்குகின்றது.

சுந்.—எனக்கும் வலது கண்ணும் வலது தோளுந் துடித்ததாய் முன்னமே கூறினேனல்லவா? அந்தச் சுபத்தினல் கடவுளருள் எங்களிருவரையுங் கூட்டுவிக்கும்போலும், ஆயினு மின்னும் என்ன நிகழ்கின்றது பார்ப்போம்.

(இன்னும்வரும்.)

டி. எஸ். சுப்பராமய்யர்.

---

## SELECTIONS.

### Against Immorality.

### பிறனில் விழையாமை.

---

**கம்பராமாயணம்.**

1. நாரம்கொண்டார் நாடுகவர்ந்தார் நடையல்லா
வாரம்கொண்டார் மற்றொருவர்க்காய் மனைவாழும்
தாரம்கொண்டார் என்றிவர் தம்மைத் தருமம்தான்
ஈரும்கண்டாய் கண்டகருய்ந்தா ரெவரையா.

2. திறந்திறம்பிய காமச்செருக்கினுல்
மறந்துதத்த மதியின் மயங்கினுர்
இறந்திறந் திழிந்தேறுவ தேயலால்
அறந்திறம்பின ராருளராயினுர்.

3. நாமத்தாழ் கடல் ஞாலத்தவிந்தவர்
ஈமத்தான் மறைந்தா ரிளமாதர்பால்
காமத்தா லிறந்தார் களிவண்டுறை
தாமத்தா ரினரெண்ணினுஞ் சால்வரோ.

4. பொருளுங் காமமு மென்றிவை போக்கிவே
திருளுண்டாமென வெண்ணலரீதலும்
அருளுங் காதலிற்றீர்தலு மல்லதோர்
தெருளுண்டாமென வெண்ணலர் சீரியோர்.

5. இச்சைத்தன்மையினிற் பிறரில்லினை
நச்சினாளு நகையுற நாணிலன்
பச்சைமேனி புலர்ந்து பழிபடூஉம்
கொச்சையாண்மையும் சீர்மையிற் கூடுமோ.

6. வெறுப்புண்டாய வொருத்தியை வேண்டினல்
மறுப்புண்டாயபின் வாழ்கின்ற வாழ்வினின்
உறுப்புண்டாய் நடுவோங்கிய நாசியை
அறுப்புண்டா லதழகெனலாகுமே.

---

நாலடியார்.

7. அச்சம் பெரிதா லதற்கின்பஞ் சிற்றளவால்
நிச்ச னினையுங்காற் கோக்கொலையால்—நிச்சலும்
கும்பிக்கே கூர்த்தவினையாற் பிறன்றாரம்
நம்பற்க நாணுடையார்.

8. அறம்புகழ் கேண்மை பெருமை யிந்நான்கும்
பிறன்றாரம் நச்சுவார்ச் சேரா—பிறன்றாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள்.

9. புக்கவிடத்தச்சம் போதரும் போதச்சம்
துய்க்குமிடத்தச்சந் தோன்றாமற் காப்பச்சம்
எக்காலுமச்சந் தருமாலெவன் கொலோ
உட்கான் பிறனில் புகல்.

10. காணிற் குடிப்பழியாங் கையுறிற் கால்குறையும்
மாணின்மை செய்யுங்கா லச்சமாம்—நீணிரயத்
துன்பம் பயக்குமாற் றுச் சாரி நீகண்ட
இன்ப மெனக் கெனைத்தாற் கூறு.

---

காளிதாசர்.

11. ஒண்மலர்க் குமுதமல்லா லொளிர்மதி யலர்த்திடாது
தண்மலர்க் கமலமல்லாற் றனிக்கதிர் நெகிழ்த்திடாதாங்
குண்மை கொளரத்தின்பாலா ருரிமையில் பிறன்றன்றாய
பெண்மையிற் சிறந்ததாரம் பெட்புறா ரென்றுமாதோ.

---

நீதிநெறிவிளக்கம்.

12 பிறன்வரை நின்றாள் கடைத்தலைச் சேறல்
அறனன்றே யாயினு மாக—சிறுவரையும்
நன்னலத்த தாயினுங் கொள்க நலமன்றே
மெய்க்கடுங்க வுண்ணடுங்கு நோய்.

---

### திருக்குறள்.

13. எளிதென வில்லிறப்பா னெய்து மெஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.

14. பகை பாவ மச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண்.

15. நலக்குரியார் யாரெனினாம நீர்வைப்பிற்
பிறற் குரியாடோ டோயாதார்.

16. அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று.

---

### வெற்றிவேற்கை.

17. தன்மனையாளைத் தனிமனையிருத்திப்
பிறன்மனைக் கேகும் பேதையும் பதரே.

---

### கொன்றைவேந்தன்.

18. பிறன்மனைப் புகாமை யறமெனத்தகும்.

---

SHORT STORY.

## பார்வதி.

---

அது வெகு அழகிய கிராமம். நாமிந்தச் சிறு கதை எழுதத்தொடங்கும் நேரம் காலைநேரம். சூரியனுடைய செஞ்சுடரொளிகள் தங்கக் கம்பிகள்போல் பளபளத்து ஜொலித்துக்கொண்டிருந்தன. குயில்களும், கிளிகளும் கூவிப் பறந்தன. காகங்கள் கரைந்தன. ஆடுமாடுகள் மந்தை மந்தையாய் தங்கள் கழுத்தில் கட்டியிருந்த மணிகள் கண, கணவென ஒலிக்க மேயச்சென்று கொண்டிருந்தன. அவ்வூரின் ரஸ்தாவினோரத்தில் கட்டப்பட்டிருந்த அக்கிரகாரத்தின் முதல் வீட்டு வாசலில் ரோஜா, மல்லிகை, முல்லை, பன்னீர்ச்செடி, நந்தியாவிட்டை முதலிய செடி கொடிகள் பயிராக்கப்பட்டு சுற்றிலும் வேலியிட்டிருந்த அத்தோட்டத்துள் வண்டுகள் ஓடிப்பறந்து அப்புட்பவருக்கங்களின் மதுவையுண்டு "ஹும்" என்ற ரீங்கார சிருங்காரத்தொனியுடன் வட்டமிட்டுப்பறந்துகொண்டிருந்தன. தென்றற்காற்று இனிமையாய் வீசுதலால் அப்புட்பவருக்கங்களின் மணமானது அக்கிரகாரம் முழுமையும் பரிமளித்தது.

இங்ஙனம் சிறப்புற்றோங்கும் அவ்வீட்டு வாயிலில் 'பிடிப்பில் திரண்டும் நீண்டும் பிள்ளாச்சுருண்டும் நெய்தன்னிற்கமழ்ந்த' கூந்தலும், வில்லைப்போன்ற புருவமும், வேலொத்த விழியும், முத்தனைய பல்வரிசையும், பவளத்தைப் பழித்த உதடும், "கண்டவர்மனமுங் கண்ணும் கவர்ந்திட" வனப்பும் வாய்ந்த ஓர் பெண்மணி தங்கக்கொடிபோல் நின்றுகொண்டிருந்தனள். அவள் அவ்வூர் "இராஜசமஸ்தான பகல்வேஷ இராமசாமி அய்யரவர்கள்"

மனைவி. அப்பெண்மணியோ கற்புக்கரசி, கொண்ட கணவனின் குறிப்பறிந்து நடக்கும் சீமாட்டி, தன் கணவனையே தெய்வமாகவும், அவன் சொல்லையே வேதவாக்கியமாகவும் பாவிக்கும் அவனுக்கேற்ற மனையாட்டி. தன் கணவன் வெளியில்போய் மணி 11 ஆகியும் வரவில்லையே என்ற ஏக்கமிகுதியால்தெருவை உற்று நோக்கிக்கொண்டு கதவோரத்தில் நின்றுகொண்டிருந்தாள். இப்படியிருக்க சிறிது நேரத்திற்குள் ஒருவர் சாந்தமான முகமும், புன்சிரிப்புத்தவழ்ந்த உதடும், சற்றுப்பருத்த சிவந்த தேகமும், கையில் கணக்கற்றமோதிரங்களும், தோடாக்களும் துலங்கிப் பிரகாசிக்க பெரிய காஸ்மீரச்சால்வையையும் போர்த்துக்கொண்டு அவ்வீட்டினுள் நுழைந்தார். அவர் தான் பிரக்யாதிபெற்ற ராமசாமி அய்யர். எவ்வளவோ அதியற்புதமானசெயல்களைச் செய்து பரிசுபெற்றவர். அவர்சாமர்த்தியம் அபாரம். இவர்வரவும், அவருக்காக அதுவரையில் காத்திருந்த அப்பெண்மணியும் முகமலர்ந்து,

"எத்தனை நாழிகை! ரொம்ப போதாய் விட்டதே, ஸ்நானத்திற்கு வென்னீர் போட்டிருக்கிறேன். சாப்பிட வாருங்கோ!" எனக் களங்கமற்ற முகத்துடன் கனிந்தமொழிகளால் உபசரித்து உள்ளேயழைத்தேகினள். அய்யரும் 'ஹாயியாகச்' சுடச்சுட வென்னீர் ஸ்நானம் செய்து தலையைத்துவட்டிக்கொண்டு கர்மானுஷ்டானங்களை அவசர அவசரமாய்ச் செய்துவிட்டு சாப்பிட உட்கார்ந்தார். அவர் சாப்பிட்டுக்கொண்டிருக்கையில் அவர்மனைவி பார்வதி அம்மாள் பக்கத்திலிருந்த தூணோடு சார்ந்து ஒரு கையால் தூணைத்தடவிக் கொண்டே,

பார்வதி.—அரண்மனையிலே என்னவிசேஷம்?

இ. அ:—என்ன விசேஷத்தைச் சொல்கிறது? நேற்று கத்திகட்டி சேவல் சண்டை, இன்று கடாச்சண்டை, "குடிக்கக்கஞ்சியில்லை அம்மாள் பேர் அன்னபூர்ணி" என்பது போல் இதெல்லாமிருக்கவேண்டியது தான். கடனோ எண்பது லக்ஷம். என்றைக்குப் பகவான் அனுக்கிரகிப்பாரோ. அதை அவர் கவனிக்கிறதே கிடையாது. நான் அவரைச் சந்தோஷிப்பிக்கவில்லை யென்று என்பேரில் கோபம். இங்கே ஒரு ஊருக்கு இப்போது கொஞ்சம் ஜோலியிருக்கிறதாகையால் போகவேண்டியிருக்கு. வீட்டை ஜாக்கிரதையாகப்பார்த்துக்கொள்" எனச்சொல்லிச் சிறிது நேரத்திற்குள் சாப்பிட்டு எழுந்து ஒரு பெரிய மூட்டையையும் பெட்டியையும் எடுத்துக் கொண்டு மனைவிகையில்செலவுக்கென்று ரூபாய் ஐம்பது கொடுத்து, வர இரண்டு மாசமாகு மென்றும் அதுவரை வீட்டை ஜாக்கிரதையாய்ப்பார்க்கவும் சொல்லிவிட்டு புறப்பட்டுப்போய்விட்டார்.

இங்கே தனியாய் பார்வதி தன் காலத்தைக் கழித்துவந்தாள். மாசம் ஆறாகியும் தன் கணவனைக்காணாததால் மனம்மடிவெய்தினள். தனியே அவள் விசனப்பட்டுக்கொண்டிருப்பதைக்கண்ட பக்கத்து வீட்டுப்பெண்கள் கூட வந்து அவளுக்குத் தேறுதல் கூறுவார்கள். என்னகூறியும் அவள் விசனம் அதிகரித்துக் கொண்டேயிருந்தது. இங்ஙனமிருக்க,

ஒருநாள் காலமே பகல் 10 மணியிருக்கலாம். பார்வதி சாப்பிட்டுவிட்டு வெற்றிலைபாக்குப் போட்டுக்கொண்டு கையில் வீணையை வைத்துக்கொண்டு கூடத்தில்,

நாதத்தின் பிரமமாகி நடுவுந்திக் கமலமான
சீதத்தின் மழையை யன்பர் எனும் பயிர்செழிக்கச் செய்த
பாதத்தின் செயலையுன்னுள்பார்த்துணர் பிர்ம்மானந்த
வேதத்தின் கீதமான வீணையைவாசி நெஞ்சே.

கற்பருப்பதமுங் கேட்டுக் கனிவுகொண்டுருக மற்றை
நிற்பனதருக்கள் கேட்டுநிறம் பெறத்தளிர் பூத்தாட

சொற்பர சிலர் யார்க்கும் சுவைதர வமுதுவார்த்து
விற்பனத்தருக்கங்காட்டு வீணையைவாசி நெஞ்சே.

என்றபடி சிறந்த இனிமையான வீணையை சுருதிகூட்டி தனது இளந்தளிர்போன்ற கரங்களால்

"பாராயோ வென்னைமுகம் பார்த்தொருகா லென் கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே.

ஓயாதோ வென்கவலை யுள்ளேயாநந்த வெள்ளம்
பாயாதோ வையா பகராய் பராபரமே.

ஓகோ உனைப்பிரிந்தா ருள்ளங்கனவில் வைத்த
பாகோமெழுகோ பகராய் பராபரமே.

கூர்த்தவறிவத்தனையுங் கொள்ளைகொடுத்துன்னருளை
பார்த்தவனுணன்னை முகம்பார் நீ பராபரமே.

கடலமுதே தேனே யென்கண்ணே கவலைப்
படமுடியாதென்னைமுகம் பார்நீ பராபரமே.

உள்ளமறிவா யுழப்பறிவாய் நானேழை
தள்ளிவிடின் மெத்தத்தவிப்பேன் பராபரமே."

எனத் தன்குரலும் வீணையும் தழுவிக்கிடக்கப்பாடிக்கொண்டிருக்கையில் வாசலில் கல, கல வென்ற சப்தத்தைக்கேட்டு திடுக்கிட்டு வெளியே ஓடிவந்தாள்.

அப்போது கையில் இரும்புவளையத்தோடு கூடிய ஒரு தண்டமும், சடைகள் அடர்ந்து தொங்கும் தலையும், நீண்ட தாடியும், பாதம் வரை மறைத்திருக்கும் உடுப்பும், போட்டுக்கொண்டு கையிலிருந்த கப்பறையை சங்கிலியினுல் சலக், சலக்கென் றடித்துக்கொண்டு ஒருவன் வீடு வீடாய்ப் பிச்சைக்கு வந்து கொண்டிருந்தான். வந்தவன் ஒரு காரணமுமின்றி வெளியே வரவும் அவள் கையை இத்தப்பிச்சைக்காரன் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு இழுத்தான். அப்போது பார்வதி "ஐயையோ! அப்பப்பா!!" என்று கோவென்றலறிக் கூச்சலிட்டாள்.

அப்போது அந்தச் சத்தத்தைக்கேட்டு அக்கிராகாரத்திலிருந்த பிராமணர்களெல்லாம திரண்டுருண்டு ஓடிவந்தார்கள். அதில் சிலர் "இவள் ஏதாவது வைதிருப்பாள். அதான் இவனுக்குக் கோபம்பிறந்தது" என்ருர்கள். பார்வதி "ஐயோ! நான் ஒரு பாவத்தையுமறியேனே எனக் கோவென்றலறினுள். அப்பிராமணர்களிற் துணிவுற்ற சிலர் முன்வந்து "ஏண்டா! இவள் கையைப்பிடித்தாய். விடுகிறாயா உதைக்கவா" என்றனர். அதற்கு அவன் "அரே கியாரே ஜாவொஜி" என்று அவர்களை அடிக்க ஆரம்பித்தான். உடனே எல்லோரும் ஓடி அரசனிடம் சொல்லவே அரசன் காவற்காரர்களை யழைப்பித்து கட்டிப் பிடித்துவர உத்தரவிட்டான். அப்படியே காவற்காரர்கள் என்ன அவன் திமுறியும் விடாமல் கொணர்ந்து நிறுத்தினுர்கள்.

இராஜா அவனைக் கோபமாய்ப்பார்த்து "ஏன் இந்தம்மாளின் கையைப்பிடித்தாய்" என அவன் பாஷையில் வினவ, அவன் "இத்தம்மாளுக்கும் எனக்கும் பாலியஸ்னேகம்" என்ருன். இதைக்கேட்ட அங்கிருந்தோர் "ஐயோ! இவன் தலையிலே இடிவிழாதா? என்ன அபாண்டமான வார்த்தை சொல்கிருன்" என வெண்ணினுர்கள். இராஜாவுக்கோ கோபம் பொறுக்கமுடியவில்லை. வெட்டிப்போடச் சொல்லி உத்தரவிட்டான். உடனே ஓ! இதென்ன ஆச்சரியம்!! பக்கிரியைக்காணும்.

எல்லாரும் முழித்துக்கொண்டிருக்கையில் பக்கிரி இருக்கவேண்டிய இடத்தில் பகல்வேஷ இராமசாமி அய்யர் நின்றுகொண்டிருக்கவும் பக்கிரியின் தாடி, கப்பறை, முதலியன கீழே கிடக்கவும், கண்டவர்களுக்கு ஆச்சரியம் அளவிடற்பாலதோ? அரசன் வெகு ஆச்சரியமடைந்தவனுய் பெரிய சிவிகையில் தம்பதி சமேதராய் கிராமப்பிரதக்ஷிணம் செய்வித்து ஏராளமான திரவியமும் கொடுத்தான். அவர்கள் வெகுகாலம் பிரக்கியாதியோடு சுகமே வாழ்ந்தார்கள். பார்வதிக்குண்டான ஆச்சரியத்தை அளவிட்டுரைக்க எம்மால் தரமல்ல.

K. S. வைத்தீநாதய்யர்.

## Thiruvilayadal Puranasangraham.

(A Review.)

## திருவிளையாடற் புராணசங்கிரகம்.

இப்பெயர் புனைந்த ஓர் புதியபுத்தகம் எமதுபார்வைக்கு வந்துள்ளது. இதனை இயற்றியவர் பாளையம் கோட்டையில் ஷண்முகம் பிள்ளை யென்பவர். ஸ்ரீலஸ்ரீ வள்ளிநாயகஸ்வாமி என்பவர் எழுதிய முன்முகத்தோடும் அபியுக்தர் பலருடைய சாத்து கவிகளோடும் வெளியிடப்பட்டுள்ளது. இஃது உமாபதி சிவாசாரியார் இயற்றியுள்ள பெரிய புராண சாரப்பாங்கில் எழுதப்பட்டுள்ள தென்பது பாவின் நடையாலும் பாணியாலும் விளங்குகின்றது. இதன் விஷயமாக எமக்குத்தோற்றிய அபிப்பிராயத்தைச் சிறிது அடியில்வரைவாம்.

புராணம் என்பதற்குப் பழமையான கதை என்பது பொருள். புராணங்களில் படைப்புக்காலம் முதலாக சர்வேசுவரன் தேவர்களுக்காயினும், மனிதர்களுக்காயினும், அல்லது பசு, பக்ஷிமுதலிய உயிர்களுக்காயினும், ஏகதேசத்தேனும், பொதுவாகவேனும், பற்பல சமயங்களிற்புரிந்தருளிய அருட்செய்கைகளை விஸ்தரித்துச் சொல்லப்படும். இப்புராணங்களுள் ஓர்தலத்தையும் மூர்த்தியையும் பிரத்தியேகித்துச் சிறப்பித்துக் குறியாமல் எவ்விடத்துக்கும் பொதுவாக ஈசுவரன் செய்தருளிய அருட்செய்கைகளை விவரிப்பன ஸ்காந்தாதி பதினெண்புராணங்கள். இவற்றுட்குறிக்கப்பட்ட விருத்தாந்தங்களையும் வேறு விஷயங்களையும் விவரித்து பிரத்தியேகம் ஒரு தலத்தையும் மூர்த்தியையும் சார்த்திச்சொல்லப்படுவன ஸ்தல புராணங்கள். பொதுப்புராணங்களிலும் இந்த ஸ்தலபுராணங்களில் நமக்கு விசேஷமான அபிமானமும் ஆஸ்தையும் உண்டாகத்தக்கது. ஏனெனில் இவற்றில் இறைவன் கடவுளர்க்குப் புரிந்தருளிய அருட்செய்கைகளிலும் மனிதராகிய நமக்குப் புரிந்தருளிய அனுக்கிரகச்செய்திகளை விசேஷமாக எடுத்துரைக்கப்படும். இப்புராணங்களை நாடோறும் நியதமாக அன்போடும் ஆராய்பவர்களுக்கு ஈசுவரபத்தியும், தர்மசிந்தனையும், பாபபயமும், உண்மை ஞானமும் உண்டாகாமற் போகாது.

ஸ்தலபுராணங்கள் அநேகம் உள்ளவாயினும் அவற்றுள் எல்லாவற்றிலும் திருவிளையாடற்புராணமே மிக்கசிறந்தது என்பது யாவரும் ஒப்பத்தக்கதே. இப்புராணத்தில் ஸ்ரீ சோமசுந்தரப்பெருமான் அன்பர்களுக்காகச் செய்துள்ள லீலைகள் அனந்தத்துள் ஆன்றோர்களாற் குறிப்பிடப்பட்டு எழுதிவைக்கப்பட்டவை அறுபத்து நான்கையும் விவரித்துள்ளது. இந்த லீலைகளை ஆலோசிப்பின் கடவுளென்பவர் அடியாருக்கு இத்துணையும் எளியராவரோ! அவ்வெளிமையை யாம் அறியாமற் போனோமே! என்று ஆச்சரியமும் மனவருத்தமும் உண்டாகாமற் போகா. ஆ! ஆ! ஒருவர்க்குத் தம் தேவியையே மகளாகக்கொடுத் தருளித் தாமும் மருமகனாகி முடிபுனைந்து புவியை ஆண்டு தமது சந்ததியே அவரது சந்ததியாக அளித்தருளினர். இன்னொருவர்க்கு மகுடமிழந்து மாற்றாரால் வருத்தமுற்றகாலத்தில் மகுடத்துக்காக மாணிக்கம் கொணர்ந்துதவிப் பட்டாபிஷேகம் செய்வித்துச், சமுத்திரம் பொங்கிப்பெருமழை பொழிந்தகாலத்தில் அவற்றால் ஊறுறாமல் நாட்டையும் நகரையும் காத்தருளினர்.

இன்னம் சிலருக்குச் சமணர்களாலும், சோழர் முதலான வேற்றரசராலும் பகையுண்டாகி வருத்தமுற்றகாலையில், அவ்வருத்தங்களை நீக்கி அருள்புரிந்தனர். ஒருவர் கடவுளை நோக்கி, ஒருகான்மீதே நடித்து நிற்றலால் அப்பாதத்துக் கென்னவருத்தமுண்டாமோ, அதை மாற்றி மற்றோர் காலாலாடவேண்டுமென்று வேண்ட அவ்வாறே புரிந்தருளினர். ஒருவர் குற்றம் தெரிந்து நீதியின் விலகாமல் தண்டம் செய்யவகை தோன்றாது பழிக்கஞ்சிக் குழப்பிய காலத்தில் அக்குழப்பத்தைத் தீர்த்தருளினர். இவ்வாறு பாண்டியராஜர்களாகிய தமது அடித்தொண்டர்களுக்குப் பற்பல காலங்களில் அற்புதமாக அருள்புரிந்ததேயன்றி ஏனையோர்க்கும் எவ்வளவோ எளியகாரியங்களையும் செய்து அருள்புரிந்தனர். ஒருவர்க்கு விறகு சுமந்தும், ஒருவர்க்கு மண் சுமந்தும், ஒருவர்க்கு உலவாப்பொற்கிழி யளித்தும், ஒருவர்க்கு உலவாக்கோட்டையீந்தும், ஒருவர்க்கு நரிபரியாக்கியும், ஒருவர்க்கு மாமனாய்வந்து வழக்குக் கூறியும், ஒருவர்க்கு அரசனோடுண்டான பிணக்குத் தீர்த்தும், ஒருவர்க்குச் சமணரை வெல்லத் திருவருளீந்தும் இவ்வாறு எண்ணிறந்த அற்புதங்களைச் செய்திருக்கின்றனர். இவ்வருட்சரிதங்களைப் படிக்கும்போது அரிபிரமாதியர்க்கும் தேடியடைதற்கரிய கடவுள் அடியார்க்கு இத்துணை எளியரா என்னும் எண்ணம் சிந்தையில் ஊற அன்பு மேலிட்டு மனமுருகாமற்போகாது. ஆதலின் இப்புராணத்துட் கூறிய விஷயங்களைச் சங்கிரகித்துக்கூறிய இவரது நோக்கம் மிகவும் மெச்சத்தக்கதே. இந்நூல் தமிழ் தெரிந்துணர்ந்த மெய்யடியார்களுக்கு மிகவும் பயன்படக்கூடியது என்பதில் யாதும் ஐயுறவில்லை.

நூலாசிரியர் இலக்கண விலக்கியங்களைக் கலக்க மறக்கற்றுத்தேர்ந்தவ ரென்பதும் இந்நூலைப்படிப் பவர்களுக்கு எளிதில் விசதமாகும். வாக்கும் நடையும் பொதுவாகச்சிறந்தே யிருப்பினும் சிற்சில விடங்களில் எழுவாய் பயனிலை எளிதிற் பிரியாது பதங்களுக்கும் பொருள் தெற்றென விளங்காமல் கடினமாயிருக்கின்றது. நாளிகோபாகம், கதலிபாகம், மதுபாகம் என்றுகூறும் நடை வேறுபாடுகளில் இவரது நடைநாளிகோ பாகமாக உட்சுவை கொள்ளல் கஷ்டமாகவேயிருக்கின்றது. பெருநூல்களைக் கற்றுப் பொருளறியத் திறமிருந்தும் போதுமான சந்தர்ப்பமாயினும் சாவகாசமாயினு மில்லாதவர்க் கிந்நூல் பயன்படுமே யன்றி ஏனையோர்க்கு அதிகப்பயன் படாது. இக்காலத்தில் தமிழியலிற் பயிற்சி குன்றி பேசுதலும் கூடத்தடுமாற்ற மடைந்திருக்கையாலே இவ்வரிய விஷயங்களை எளிய நடையில் வசன ரூபமாவாயினும் செய்யுளிலானாலும் ஒரேசந்தமாக வேற்றுமையின்றிப் படிப்பதற்கினிமையில்லாத எண்சீரடியிற் சொல்லாமல் காப்பியக்கலித்துறை, கலிவிருத்தம் முதலாகிய வெவ்வேறு பாவினங்களில் விஷயங்களுக்குத் தக்கபடி மாறி மாறிச் சொல்லியிருப்பாராயின் இந்நூல் இன்னம் விசேஷப்பயனுடைத்தாகும் என்பதிற் சந்தேகமில்லை.

இந்நூற்குக் குற்றஞ்சொன்னதாகக் கருதக் கூடாது. கட்டின வீட்டுக்குப்பழுது சொல்லுதல் யாவர்க்கும் எளியதே. மொத்தத்துக்கு இந்நூல் மிகச்சிறப்புடையதே. இதனைத் தெரிந்துகொள்ள மாட்டாதார் ஒரு கால் குருமுகமாகத் தெரிந்து கொள்வாராயின் பின்பவர்க்குப் படிக்குந்தோறும் பேரானந்தம் பயக்குமென்பதிற் றடையில்லை. இதன் விலையும் மிகச்சுலபமாயிருத்தலின் இதனைப்பலரும் வாங்கிப்படித்து நற்பயனையடைவா ரென்று நம்புகின்றனம்.

CURRENT NOTES.

## வர்த்தமானக்குறிப்புகள்.

நமது மாக்ஷிமைதங்கிய ராஜசக்ரவர்த்தி அவர்களுக்கு அடுத்த ஜூன் மாதத்தில் பட்டாபிஷேகமஹோத்ஸவம் நடக்கப்போகிறது. அவ்வுற்சவத்துக்கு அடியில் கண்ட இந்திய ராஜாக்களும் அதிபர்களும் இலண்டன் நகருக்கு அழைக்கப்பட்டிருக்கிறார்கள். (1) க்வாலியர் மஹாராஜா, (2) கோல்ஹாபூர் ராஜா, (3) ஜயபுரம் மஹாராஜா, (4) பஹவல்புரம் நபாப், (5) நபாராஜா இவர்களன்றிப் பின்வருபவர்களும் அழைக்கப்பட்டார்களாயினும் அவர்களுக்குப் போதற்குச் சரிப்படமாட்டாதாம். (1) ஹைதராபாத் நிஜாம், (2) உதயபுரம் மஹாராணு, (3) திருவாங்கூர் மஹாராஜா, (4) கொச்சிராஜா இவர்களன்றி இன்னும் அநேகரையும் அழைக்க சக்ரவர்த்தியவர்களுக்கு விருப்பமாயினும் அவர்களுக்கு விடுதிமுதலிய அமைத்து உபசரிக்கப் போதுமான சௌகரியங்கள் இல்லாமையினாலே அவ்வாறு செய்யப்படவில்லையாம். மற்றவர்களுக்கெல்லாம் 1903-ம்வருஷ ஜனவரிமீ 1உ டில்லி நகரத்தில் ஓர் தர்பார் கூட்டப்படுமென்றும் அதில் ஹாஜராஜனல் மகுடாபிஷேகத்துக்கு வந்தது போலவே எண்ணப்படும் என்றும் உத்திரவாயிருக்கிறது. மேலே கூறிய இராஜாக்கள்தவிர பற்பல மாகாணங்களிலுமிருந்து முக்கியமான சுதேச கனவான்கள் சிலரும், ஐரோப்பிய உத்யோகஸ்தர் சிலரும் தெரிந்தெடுத்தழைக்கப்படுவார்களாம். இவர்களன்றி சுதேச ராணுவத்திலிருந்தும் ஒரு தொகுதி அனுப்பப்படுமாம். அதற்கு அதிபதியாக ஜாட்பூர், ஸர். பிரதாபசிங் கென்பவர் நியமித்தனுப்பப்படுவாராம்.

---

நமது பெண்களுக்குத்தான் நகைப்பைத்தியம் என்றெண்ணியிருந்ததுபோக ஐரோப்பிய மாதர்களும் வரவர அப்பித்துக்கொள்ளுகிறார்களாம். நமது பெண்களைப்போலவே அவர்களும் காதுக்குத் தலைக்குக் கழுத்துக்கு மார்புக்கு இடுப்புக்குக் கைக்கு நகைகள் தினிசுதினிசாய் பூட்டிக்கொள்ளுகிறார்களாம். மூக்குக்குமட்டும் இன்னம் எற்படவில்லைப் போல் இருக்கிறது. காலுக்குச் செருப்புப்போடாவிடின் அதற்கும் பூணுவார்கள் என்பதிற் சந்தேகமில்லை. இவ்வாறு அணிந்துகொள்ளுதலன்றி காதுக்குச் சிறிய கடுக்கன் போதாதென்று பெரிய தோடுகளும் கம்மல்களும் ஜிமிக்கிகளும் போட ஆரம்பித்திருக்கிறார்களாம். இவ்விஷயமாக எழுதும் ஒருவர் நகை அதிகமாகப் பூணுதல் அநாகரிகம் என்றும் அவற்றால் அழகுண்டாகாமல் அழகு குன்றுகின்றதெனறும், பார்ப்பவர்கள் கண்கள் கல்லும் பேரிலும் மணியின்பேரிலும் போவதனால் டிருந் யானவடிவழகைக் கவனிப்பதில்லை யெள் ழிக்காஞ்சி லுகிறார். இவருடைய அபிப்பிராய ண்மையான கேட்கிறார்கள். இவ்விஷயத்தைப்ப மொருவர் 'காதுக்கிட்டால் கண் றிஸ்தவர்களு என்கிறார். நம்மவர்களுக்குள்ளே ஸ்தகத்திலோர்

முகத்துக்கழகு' என்று சொல்லுதல் வழக்கம். கண்ணுக்கு நல்லதென்னும் கொள்கை புதிதாயிருக்கிறது.

---

நமது மாட்சிமை தங்கிய சக்ரவர்த்திக்கு அனேக துர்தசைகளும் மரணபாயமு முண்டாகுமென்று ஐரோப்பிய சோதிடர்கள் சொல்லியிருப்பதனுலே அதனுண்மையை அறியும்பொருட்டு ம-ா-ா-ஸ்ரீ, திவான்பஹதூர் ரகுநாதராவவர்கள் அவரது ஜாதகபாவங்களை தஞ்சாவூர் ஜோஷிகிருஷ்ணசாரியார், கள்ளக்குறிச்சி வீராசாமிசாஸ்திரிகள் என்னும் இரண்டு சிறந்த சோதிடர்களால் தனித்தனியே பார்க்கச்சொல்ல அவர்களிருவரும் ஓருவரையொருவர் அனுசரித்து நமது சக்ரவர்த்தி இன்னம் 15-வருஷத்துக்குக் குறையாமல் ஆளுடைசெய்வாரென்றும் மத்தியில் தேகாரிஷ்டங்கள் சில உண்டாயினும் சீக்கிரம் நீங்கிப்போமென்றும் கூறியிருக்கின்றனராம். இந்நற்செய்தி யாவரும் அறியத்தக்கது.

---

சுமார் 150-வருஷங்களுக்கு முன் கல்கத்தாவில் சுராஜூதௌலா வென்னும் பங்காள நவாபின் கொடுமையால் இருட்டறை யென்னும் கொடிய காராக்கிரகத்தில் அடைபட் டிறந்துபோன அங்கிலேயரின் ஞாபகார்த்தமாக அவ்விடத்தில் நமது ராஜப்ரதிநிதியாகிய கர்ஸன் பிரபுவால் தமது சொந்தச் செலவால் ஒரு சிலாசாசனம் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. அவ்விருட்டறையில் அடைப்பட்டிறந்தவர் 123-பேர்கள் என்று சாதாரணமாகக்கொண்டிருக்கும் கணக்குச் சரியல்ல வென்றும் 600-பேர்வரையில் அக்காலத்தே கோட்டையில் இருந்ததனுல் அதிகமானபேர் அடைபட்டு மடிந்திருக்கவேண்டுமென்றும் அவ்விஷயமாக ஆராய்ந்து பார்த்தவர்கள் சொல்லுகிறுர்கள். சுராஜதௌலாவின் கொடுமைதான் என்னகொடுமை!

---

## உபகார சங்கங்களின் ரிபோர்ட்டு.

---

### எடப்பள்ளி உபாத்தியாயர் சங்கம்.

901-ம் ஞூ செப்டம்பர்மீ 22உயில் ஜகதாளா சங்கத்தின் மீட்டிங்கில்நடந்த நடபடிக் ஸ்,

அவற்று

ணமே ப்ாளா வாத்தியார், M. பெள்ளிகவுடர் கதே. ரீன் வியாதிகளைத்தடுக்க முயற்சிகள்' மான் அஒரு வியாசம் எழுதிவந்து வாசித்தார். இதை யாதரித்து காரியதரிசியாலும் பிரசிடெண்டாலும் சிற்சில சங்கதிகள் சொல்லப்பட்டன.

2. பிரசிடெண்டவர்கள் 'பக்தி' என்னும் விஷயத்தை எடுத்துக்கொண்டு விளக்கி மாதிர் பக்தி, பிதிர் பக்தி, குருபக்தி, ஈசுவர பக்தி என்பதாகப் பிரித்து, பல பெரியோருடைய பாடல்களை ஆதாரமாக எடுத்துக்காட்டி, அநேக திருஷ்டாந்தங்களுடனும், ஆசியத்துடனும் ஒரு நீண்ட பிரசங்கம் செய்தார். இடைக்கிடை அவரிடம் படிக்கப்பட்ட பிள்ளைகள் வாய்ப்பாடம் செய்திருந்தவைகளைச் சொன்னது சமயோசிதமாயிருந்தது.

3. உப்பதலே ளேகிகவுடர் 'படுகர்கள் நிலைமை' என்பதைப்பற்றி ஒரு வியாசம் எழுதிக்கொண்டு வந்து வாசித்தார்.

4. ஷை விஷயத்தைப்பற்றியே எடப்பள்ளி உதவி உபாத்தியாயர் N. ஆரிகவுடர், ஒரு வியாசம் எழுதிவந்து வாசித்தார்.

5. உப்பதலைகாரர் கொடுத்திருந்த விண்ணப்பத்தை ரிகார்டு செய்யப்பட்டது.

6. கட்டபெட் உவாத்தியாயர் 'நமது கண்களைக் காப்பாற்றும் முறை' என்பதைப்பற்றி ஒரு வியாசம் எழுதி வாசிப்பதாக ஒப்புக்கொண்டார்.

மறு மீடிங் வழக்கம்போல் 13-10-01-ல், எடப்பள்ளியில் கூடப்படும்.

---

### 1901-ம் ஞூ நவம்பர்மீ 17உ ல், எடப்பள்ளியில் கூடிய 'உபாத்தியாயர் சங்கத்தின்' மீட்டிங்கில் நடந்த நடவடிக்கைகள்.

---

1. கட்டபெட் உபாத்தியாயர், சரஸ்வதி அய்யர் 'நமது கண்களைக் காப்பாற்றும் முறை' என்பதைப் பற்றி ஒரு உபன்னியாசம் செய்தார்.

இதைப்பற்றியே ம-ா-ா-ஸ்ரீ, T. C. வெங்கடரமணைய ரவர்களும், பிரசிடெண்டவர்களும் சற்று பிரசங்கித்தார்கள்.

2. அரவங்காடு குடிகளால் அவ்விடத்தில் ஒரு தடவை மீடிங்கு நடத்தவேணுமாய் எழுதிக்கொள்ளலான விண்ணப்பத்தை மறு மீடிங்கில் கவனிக்கப்படுமென்று தீர்மானிக்கப்பட்டது.

3. அடுத்த சபையில் 'கடவுள் ஒருவர் உண்டு' என்பதைப்பற்றி Y. N. பெள்ளிகவுடரும், திப்பாகவுடரும் வியாசம் எழுதி வருவதாக ஒப்புக்கொண்டார்கள்.

சபாநாயகருக்கு வந்தனத்துடன் சபை கலைந்
.

அடுத்த மீட்டிங்கு 8-12-01-ல், வழக்கம்போல்
ப்படும்.

T. N. RAGHAVENDRA ROW,
*Secretary.*

T. VENKATARAMANA IYER,
*President.*

---

### திட்டகுடி உபாத்தியாயர் சங்கம்.

---

1901-ம் ஞு நவம்பர் மீ 4உ நடந்த மீட்டிங்கின் நடவடிக்கைகள்.

1. சென்ற மீட்டிங்கில் நடந்த தீர்மானங்க
ம் விஷயங்களும் படிக்கப்பட்டன.

2. முன் மீட்டிங்கில் சங்கத்தார் கோறுதல்
காரம் சேஷகிரி ஆசாரியாரவர்கள் ஆகாரவிஷய
யும், ஆதிகேசவபிள்ளை அவர்கள் பெண்கல்வி
க்குறித்தும் தனித்தனியே ஓர் பிரபந்தம் எழுதி
து நிகழும் சங்கத்தில் பிரசிங்கித்த உபன்னி
சம் சங்கத்தாரனைவரும், மிக திருப்திகரமாய்
கீகரிக்கத்தக்கதா யிருந்தது மன்னியில் பிரபந்
தி லடங்கிய பொருளமைவுக்காகவும், அவர்க
விவேக கூர்மைக்காகவும் யாவரும் களிகூர
ஞர்கள். சென்ற மீட்டிங்கின் கற்பனைப்படி
சாமி அய்யரவர்கள் சென்னை இராஜதானியின்
லயைக்குறித்து கற்பிக்கவேண்டிய விஷயமாய்
பாடக்குறிப்பு எழுதிவந்து நிகழும் மீட்டிங்கில்
டகுடி போர்டு ஸ்கூல் 4-வது வகுப்பு மாணாக்
ளுக்கு போதித்த விஷயம் அன்னோர்கள் எளி
கிரகிக்கக்கூடியதா யிருந்தது மன்னியில் சங்கத்
ர்கள் வியக்கத்தக்கதாயு மிருந்தது.

3. மேற்கண்ட மூன்று விஷயங்களுக்கும் பிரதி
பார்செய்து நிகழும் மீட்டிங்கின் புரொஸீடிங்
டன் ஸ்கூல் ஸப்-அஸிஸ்டண்டு இன்ஸ்பெக்டரவர்களுடைய பார்வைக்கு அனுப்பச் செயர்மென் அவர்களைக் கேட்டுக்கொள்ளப்பட்டது.

4. விவேகசிந்தாமணி பத்திராதிபராகிய ம-ா-ா-ஸ்ரீ, ஸி. வி. சுவாமிநாத அய்யரவர்களால் வெளிப்படுத்தப்பட்டு அங்கீகரிக்கப்பட்டிருக்கிற சுகத்தின்பயனைக்குறித்த ஓர் சிறு புஸ்தகத்தில் முதல் 14-பக்கம் தொளார் பிக்சட்கிராண்டு ஸ்கூல் உபாத்தியாயர் சுப்பராயமுதலியாரால் மிகத் தெளிவாயும் திருத்தமாயும் படிக்கக்கேட்ட சபாநாயகரும் மற்றுமுள்ள சங்கத்தவர்களும் நுண்ணிய விவேகத்தோடும், பரோபகார சிந்தையோடும் ஊக்கத்தோடும் சுகத்தின் உண்மைப்பயனை யாவரும் எளிதாய் அறிந்து நன்மையைப் பெறற்குறிய இந்நூலைப்பயந்த நூலாசிரியரது குணவிசேஷங்களை வியந்து அவருக்கு வந்தனமளிக்கலாயினார்கள்.

5. தொழுதூர் ஸ்கூல் உபாத்தியாயர் ஸ்ரீநிவாசபிள்ளை விவேகசிந்தாமணி சரிதை ஒன்றில் சிறுவர்க்காக அமைக்கப்பெற்ற ஓர் சரித்திரத்தை வந்திருந்த 4-வது வகுப்பு மாணாக்கர்களுக்குப் படித்துக்காட்ட அவர்கள் அதைக்கேட்டுச் சந்தோஷித்தார்கள்.

6. முன் மீட்டிங்குகளில் ஏற்பட்ட தீர்மானப்படி ரீடிங்ரூம் ஏற்படுத்தவேண்டிய விஷயமாய் புஸ்தகம் கொண்டுவந்து கொடாதவர்கள் அடுத்த மீட்டிங்கில் கொண்டுவந்து கொடுப்பதாக ஒப்புக்கொண்டார்கள்.

7. அடுத்த மீட்டிங்கில் நடத்தப்படவேண்டிய விஷயங்களைக்குறித்த ஏற்பாடுகள்.

சேஷகிரிஆசாரியாரவர்கள் தேக முயற்சியைக்குறித்தும், ஆதிகேசவபிள்ளையவர்கள் பெண் கல்வி விஷயமாய்ப் பின்றொடர்ந்தும், கந்தசாமி அய்யரவர்கள் உடையைக்குறித்தும், சுப்பராயமுதலியார் 4-வதுவகுப்புப் பிள்ளைகளுக்குக் கடைக்கணக்குகளைக் குறித்தும் குறிப்பெழுதிவந்து உபன்னியசித்தும் கற்பித்தும் இச்சங்கத்தை சிறப்பிக்கவேண்டுமென்பது.

M. NATARAJA PILLAI,
*Chairman.*

---

## சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

---

### King Solomon and the Ants.

### ஸாலோமோன் மகாராஜாவும் எறும்புகளும்.

---

முன்னொருகாலத்தில் யூதேயாதேசத்துக் கரசனாகிச் 'சாலோமோன்' என்றொருவனிருந்தான். அவன் மனிதர்களுள்ளெல்லாம் மிகவும் அறிவிற்சிறந்தவனென்று மதிக்கப்பட்டிருந்தான். இவனெழுதிய 'முதுமொழிக்காஞ்சி' யென்னும் ஒரு நூல் அனேகம் மேன்மையான தர்மங்களைத் தெரிவிப்பதாய் கிறிஸ்தவர்களுடைய பைபிலென்னும் வேதபுஸ்தகத்திலோர்

பாகமாக ஏற்றுக்கொள்ளப்பட்டுச்சிறப்படைந் திருக்கின்றது. இவன் அறிவில் சிறந்திருந்த லேயன்றி ஆண்மையிலும் செல்வத்திலும் கூட மிக்க மேன்மையடைந் திருந்தானென்று தெரியவருகின்றது. ஏசுகிறிஸ்துநாதர் ஒரு சமயத்தில் நாம் ஊனுடைகளைப்பற்றிக் கவற்சிகொள்ளல் வீணென்னும் விஷயத்தைச் சுட்டிச்சொல்லுமிடத்து, "வயல்களில் தாமாய் முளைத்தெழுகின்ற அம்மலர்களைப்பாருங்கள். அவைகள் மெய்வருந்தி யுழைப்பது மில்லை, நூற்பதுமில்லை. ஆயினும் சாலோமோன் கூட எவ்வளவோ பிரதாப முள்ளவனாயிருந்தும் இம்மலர்களைப்போலவ்வளவு சிறப்பாய் உடைதரித்தவனல்லன்" என்று இச்சாலோமோனைச் சிறப்பித்து திருஷ்டாந்தமாகக் கூறியிருக்கின்றனர். ஆதலின் இச்சாலோமோன் மகாபிரதாபமுடையோ னென்பதும் எளிதில் விளங்கும்.

இவ்வரசன் பெருமையைக்கேட்டு சேபியர் என்னும் அயல்தேசத்து அரசி யொருத்தி இவன் புத்திவிசேஷத்தைப் பரிசோதித்து அறியவேண்டு மென்னும் எண்ணமுடையாளாய் இவனது இராஜதானிக்கு வந்திருந்தனள்.

அப்போது அரசன் ஒரு நாள் தனது மந்திரிகள், தந்திரிகள்,சாமந்தர் முதலானோர்களோடும், இந்த அரசியோடும் அனேகம் பரிசனர்கள் சூழப் புறப்பட்டுப்போகும் காலையில் வழியில் எறும்புப் புற்றொன்று எதிர்ப்பட்டது. அதைக்கண்டதும் அவ்விராணி, அரசன்புத்தி நுட்பத்தைப் பரிசோதித்தற்கு இதுதான் நல்ல சமயமென்று நினைத்து, அரசனைநோக்கி, "அரசர் பெருமானே தமக்குத் தெரியாத விஷயம் உலகிலொன்றும் இல்லையே. பக்ஷி மிருகங்கள் கிருமிகீடாதிகள் அனைத்தின் பாஷையும் நீர் அறிவீரன்றோ. இப்போது இவ்வெறும்புகள் ஒன்றோடொன்று யாது பேசிக்கொள்ளுகின்றன; கேட்க விரும்புகின்றேன்" என்றனள். உடனே சாலோமோன் அவளை நோக்கி அவற்றின் சம்பாஷணையை உணர்த்து வேன் கேட்பாயாக. இவை சொல்வ தெ னெனில் 'உலகில் மனிதர்களால் புத்தி னென்றும், சத்விருத்தியுடையோனென்று நீதிமானென்றும் கொண்டாடப்பட்ட சனை இதோபாருங்கள். நம்மைக்கொஞ்சமு தயவில்லாமல் காலால் தேய்த்துப் புழுதி அரைத்துக்சொல்ல வருகின்றனன்' என்கி றன என்றனன்.

இவ்வாறு அரசன் கூறியதைக் கேட்டது அவ்விராணி "தேவரீருடைய பாதங்க பட்டு நசுங்கிச் சாகக்கொடுத்துவைக்கவே டுமே? இச்சுகிர்தம்யாவர்க்குக்கிட்டும்? எவ் ளவோ ராஜராஜாக்கள் கூடத் தேவரீர் பாத களில் வீழ்ந்தெழுதல் தங்களுக்குக்கிடைய பெரும்பேருக மதித்திருக்க, இவ்வற்ப ஜந் கள் தேவரீரை இவ்வாறு இகழலாமோ" எ றனள். அப்போது சாலோமோன் "அப்ப யன்று; புத்தியும் சத்தியும் பெற்றவர்களு அழகாவது அசத்தர்களானவர்களை அருட் டும் காத்து நன்மை செய்தலேயாம்" எ கூறி அவ்வழியைவிட்டு அப்புரமாகத்தன் வ ரையைச் செலுத்தினன். 'யதாராஜா தத பிரஜா' என்றபடி அரசன்வழிவிலகிச் செ லக்கண்டதும் ஏனையோர்களும் அவ்வா விலகிச்சென்று அவ்வெளிய எறும்புகளுக் யாதும் ஊறுசெய்யாமல் அப்பாற்சென்றன

இதைக்கண்ட அச்சேபியராணி த வணங்கி அரசனைநோக்கி, "அரசர்பிரானே தமது புத்தியும் பெருமையும் இன்றுதான் கண் ணாரக்கண்டேன். எந்நாட்டில் அரசன் வலி யோர்களுடைய இச்சகங்களை மதியாது எளி யோர்களுடைய குறைகளைத் தெரிந்து நீக்கு கின்றானோ அந்நாட்டில் வாழும்குடிகளே பாக்கியசாலிகள்" என்று அரசனை மெச்சிப் போயினள்.

விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்.

இவை ஒவ்வொன்றும் நாணயமான இங்கிலீஷ் பைண்டு ... கில்ட் எழுத்துகள் பதித்துள்ளன.

...கீர்த்திமைதங்கிய இந்தியா சக்கிரவர்த்தினியா விக்டோரியா மஹாராணியவர்கள் சரித்திரம். ...டங்களோடும், இந்தியா கவர்ன்மெண்டு, 'இந்தியா ...ஸ்' இவைகளின் அமைப்பு, அமுல்செலுத்தும் முறை ...ங்களோடும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ. 1-4. ...P. ரூ. 1-8. அதிக கில்ட் கொடுத்தது ரூ. 1-6. V.P.P. ...-10.

...ந்தாது திவ்விய சரித்திரம்.—விலை அணா 14. ...P. ரூ. 1-2. அதிககில்ட்கொடுத்தது : ரூ. 1. V. P. P. மூலமாக ரூ. 1-4.

விவேகமஞ்சரி.—புஸ்தகம் I. இதிலடங்கியவை : (1) கோல்பர்ட்சரித்திரம். (2) சத்தியதேவதைக்கதை. (3). சிவாஜிமஹாராஜா சரித்திரம். விலை அணா 14. V. P. P. ரூ. 1-2 அதிக கில்ட் கொடுத்தது : ரூ. 1. V. P. P. ரூ. 1-4.

இம்மூன்று புஸ்தகங்களும் கில்ட் எழுத்துகளின்றி காலிகோ கட்டடம்செய்து தனித்தனியாகவும் கிடைக்கும் :

(1) கோல்பர்ட் சரித்திரம் : துணிவியாபாரிகடையிலிருந்து முதல்மந்திரிஸ்தானத்துக்குவந்தவாலிபன்கதை. விலை அணா 5. V. P. P. அணா 8.

(2) சத்தியதேவதைகதை : விலை அணா 5. V. P. P. மூலமாக அணா 8.

(3) சிவாஜி மஹாராஜாசரித்திரம் : விலை அணா 6. V. P. P. மூலமாக அணா 9.

ஆபத்துக்கிடமான அபவாதம் அல்லது கமலாம்பாள் சரித்திரம். விலை ரூ. 1-8. V. P. P. ரூ. 1-14. அதிக கில்ட் கொடுத்தது : ரூ. 1-12. V. P. P. ரூ. 2-2.

விவேகரஸத்தாலாட்டு. 6 பை. தபாற்கூலி 6 பை.

வேண்டுவோர் சென்னை திருவல்லிக்கேணி அ. ப. ஏஜன்ஸி, காரியதரிசி ஸி. வி. சாமிநாதய்யர் அவர்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

கமிஷனுக்கு விற்கப்படும் புஸ்தகங்கள்.

| | | |
|---|---|---|
| ...மாலதிமாதவம் | ... ... | விலை அணா 5. |
| ...தினதபாலு... | ... ... | „ „ 8. |
| ...கல்வி விளக்கம் | ... | விலை ரூபா 1-0-0. |

தபாற்கூலி பிரத்தியேகம்.

*Apply to the D. K. Agency, Triplicane, Madras.*

# FOLKLORE IN SOUTHERN INDIA

IN ENGLISH

By Pandit S. M. NATESA SASTRI, B.A.,

*Member of the London Folklore Society.*

| | |
|---|---|
| Part I. Re. 1 0 | Part III. Rs. 1 8 |
| „ II. Re. 0 8 | „ IV. Rs. 2 0 |

*Or Rs. 5 a Set. Postage and V. P. charges extra.*

**Only a few sets available.**

**Don't miss this opportunity to secure a rare work which is now out of print.**

*Apply sharp to the Secretary, D. K. Agency, Triplicane.*

---

THE

# GOSPEL OF BUDHA:

BY

## PAUL CARUS.

**Paper cover: Price Rs. 1-8**

**By V. P. post Rs. 1-14.**

Only a few copies on hand.

***Apply sharp to the Secretary,***

D. K. AGENCY,

*Triplicane,*

**Madras.**

IN THE PRESS—WILL BE SHORTLY PUBLISHED.

THE VIVEKA CHINTAMANI SERIES.

# KANTHIMATHI—A NOVEL IN TAMIL.

(AFTER SCOTT'S TALISMAN)

BY

## K. V. SUBHAYYA IYER, B.A., L.T.

கே. வி. சுப்பய்யர், பி. எ., எல். டி., அவர்களால்

இயற்றப்பட்ட

# காந்திமதி

என்னும் தமிழ்க்கதை

சீக்கிரத்தில் புத்தக ரூபமாய் வெளியாகும்.

---



---

ADVERTS: CONTRACT RATES.—Yearly Rs. 120 for a full page and Rs. 70 for half a page. English Advts. at 1 inch single column per insertion. For further particulars apply to MR. C. V. SWAMINATHA AIYAR, *Secretary, D. K. A[...]*, *Triplicane, Madras.*

Vol. X.] JANUARY, 1902. [No 9.

# THE VIVEKA CHINTAMANI

## A MONTHLY TAMIL MAGAZINE AND REVIEW.

DEVOTED TO THE DIFFUSION OF GENERAL KNOWLEDGE.

# விவேகசிந்தாமணி

அறிவைப் பரவச்செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."—குறள்.

CONTENTS. PAGE.



அட்டவணை. பக்கம்.




Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minim m Subscription Rs. 5.

C. V. SWAMINATHA AIYAR,

Secretary, Diffusion of Knowledge Agency, Triplicane,

MADRAS.

Thin Paper Edition for the People. Price of Single Copy As. 6. ]





[ Subscription Price: Yearly Rs. 4; If Paid Half-Yearly Rs. 2-2.

FOR FULL TERMS OF SUBSCRIPTION SEE INSIDE.

EDITORIAL AND PUBLISHING OFFICE: ANANDHA ASHRAMA, TRIPLICANE.

PRINTING OFFICE: GRAVES, COOKSON & CO., POPHAM HOUSE, BROADWAY.

---

## NOTICE.

The Editor of this Journal who has just recovered from a long and tedious illness being compelled under medical advice to take 6 months' complete rest, the conduct of this Journal has been entrusted to a valued friend, who will carry it on, on the same lines as hithertofore. All literary contributions to be addressed merely "To the Editor" without any name.

1st November 1901.

---

## விளம்பரம்.

இப்பத்திரிகையின் ஆசிரியர் நீடித்து காயலாவாக விருந்து இப்பொழுதுதான் அனுகூலப்பட்டிருக்கிறார். இன்னும் 6-மாசத்துக்கு யாதொருவேலையும் செய்யக்கூடாதென்று டாக்டர் சொல்லுவதால், இப்பத்திரிகையை நடத்தும் வேலை, நமது அரிய நண்பர் ஒருவர்வசம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது. அவர் எப்போதும்போல் இப்பத்திரிகையை நடத்திவருவார். விஷயங்கள் எழுதியனுப்புவோர் "பத்திராசிரியருக்கு" என்று வேறுபேர் குறிக்காமல் விலாசம் எழுதவேண்டும்.

1901-௵ நவம்பர்௴ 1௳.